

# அம்ருதா


Amrudha Tamil Monthly

Volume 16 Issue 05 December 2021 Rs.25

ஆண்டு 16 இதழ் 05 டிசம்பர் 2021 ரூ. 25


- பிரபு திலக்
- கே. சச்சிதானந்தன்
- தி.இரா. மீனா
- த. அரவிந்தன்
- மணி எம் கே மணி
- எஸ். ராமகிருஷ்ணன்
- பொ. கருணாகரமூர்த்தி
- சுகிர்தராணி
- விக்ரமாதித்யன்
- ஷங்கர்ராமசுப்ரமணியன்
- டி. கண்ணன்
- விட்டல்ராவ்
- வேல் கண்ணன்
- பாரதி மணி
- ஸிந்துஜா
- ஜேவியர் மரியாஸ்
- ஜெகநாத் நடராஜன்
- அமுதா ஆர்த்தி
- இந்திரா பார்த்தசாரதி

# அத்துமீறல் அலட்சியம் ஆபத்து

ஆண்டு 16 இதழ் 5



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

டிசம்பர்-2021 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

துணை ஆசிரியர்
**தளவாய் சுந்தரம்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவிசுப்பிரமணியன்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **பிரபாகரன்**

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# இந்த இதழில்...

# அத்துமீறல் அலட்சியம் ஆபத்து!

பிரபு திலக்

'வெள்ள அபாய எச்சரிக்கை' எனத் தேடினால், தமிழ்நாடு முழுவதும் எல்லா ஊர்களையும் காட்டுகிறது, கூகிள். சில சென்ற மாதம்; மற்றவை அதற்கும் முன்னால். இந்த ஆண்டு மழையால் பாதிக்கப்படாதவை பாதுகாப்பான பகுதிகள் என்று அர்த்தமல்ல; அவை எல்லாம் கடந்த ஐந்து வருடங்களுக்குள் ஒருமுறையாவது பாதிப்புக்குள்ளாகி இருக்கின்றன. 2015 மாமழைக்குப் பிறகும் தமிழ்நாட்டின் எல்லாப் பகுதிகளும் சாதாரண மழையைக்கூட எதிர்கொள்ள முடியாத நிலையில்தான் நீடிக்கிறது என்பதையே இது காட்டுகிறது!

சென்ற மாதம் சென்னை, கன்னியாகுமரி மாவட்டம் உட்பட பல பகுதிகள் தண்ணீரில் மிதந்தன. முக்கியச் சாலைகள் எல்லாம் தண்ணீர் தேங்கியதால், தினமும் பள்ளிக் கல்லூரி விடுமுறை தினங்களை நீட்டித்துக்கொண்டே சென்றனர், மாவட்ட ஆட்சியர்கள். பல லட்சம் ஏக்கர் விவசாய நிலங்கள் வெள்ளத்தில் மூழ்கியதில், பயிர்த் தொழிலுக்காக விவசாயிகள் போட்ட முதல் எல்லாம் வீணாகி விட்டது. 2015இல் 'சென்னை வெள்ளம் ஓர் எச்சரிக்கை. இதனை ஒரு பாடமாக எடுத்துக்கொண்டு இனிவரும் காலங்களில் இதுபோன்ற பேரிடர் நிகழாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்' என்று எல்லோரும் பேசினார்கள். ஆனால், அது பேச்சாக மட்டுமே இருந்திருக்கிறது என்பதை இந்த வருட மழை சுட்டிக்காட்டிவிட்டது.

மழை நீரின் பாதைகளான ஆறுகளும் நீரோடைகளும் சிதைக்கப்பட்டுள்ளதும், மழை நீரின் வீடுகளான ஏரிகளும் குளங்களும் ஊரணிகளும் ஆக்கிரமிக்கப்பட்டுள்ளதும் இதற்கு ஒரு காரணம்; மனிதன், காற்று வெளியில் ஏற்படுத்தியிருக்கும் மாசுகளால், பூமியின் வெப்பநிலை அதிகரித்திருத்து, பருவநிலை தாறுமாறாகச் சீர்குலைந்து கிடப்பது மற்றொரு காரணம்.

கன்னியாகுமரி, திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்கள் 1992ஆம் ஆண்டு கடும் வெள்ளப் பாதிப்புகளைச் சந்தித்தன. பாபநாசம், சேர்வலாறு, மணிமுத்தாறு ஆகிய மூன்று அணைகளும் உடையும் அபாயத்தைத் தவிர்க்க நள்ளிரவில் திறக்கப்பட்டன. தாமிரபரணி ஆற்றில் 2.04 லட்சம் கன அடி தண்ணீர் கடும் சீற்றத்துடன் பாய்ந்தது. அம்பாசமுத்திரம், விக்கிரமசிங்கபுரம், பாபநாசம் தொடங்கி, தூத்துக்குடி மாவட்டத்தில் தாமிரபரணி கடலில் கலக்கும் இடம் வரைக்கும் கடும் பாதிப்புகளை ஏற்படுத்தியது அந்த வெள்ளம். கன்னியாகுமரி மாவட்டத்திலும் குழித்துறை தாமிரபரணி மற்றும் நாகர்கோவில் பழையாற்றில் பலர் அடித்துச் செல்லப்பட்டனர். கிட்டதட்ட 100 பேர்கள் பலியானார்கள்; அக்கால மதிப்புபடி 500 கோடிக்கும் மேல் இழப்பு.

1992க்குப் பிறகும் பலமுறை வெள்ளம் வந்து சென்றுவிட்டது. 2005 பெருமழையில் பரவலாகத் தமிழ்நாடு முழுக்கப் பாதிக்கப்பட்டது; 2013 தானே புயலில் கடலூர் சின்னாபின்னமானது. 2015ஆம் ஆண்டு சென்னை வெள்ளப் பாதிப்புகளைக் கடுமையான பாதிப்பு என ஒன்றிய அரசே அறிவித்தது. 2014ஆம் ஆண்டும் தமிழ்நாட்டில் ஏற்பட்ட வெள்ளப் பாதிப்புகளை கடுமையான பாதிப்பு என ஒன்றிய அரசு அறிவித்திருந்தது. மதுரை, தேனி, திண்டுக்கல், கிருஷ்ணகிரி, தருமபுரி, திருவண்ணாமலை, விழுப்புரம், கடலூர், திருப்பூர், ஈரோடு மாவட்டங்கள் அப்போது கடும் பாதிப்புக்குள்ளாகின. கிட்டத்தட்ட 400 பேர் பலியானார்கள். 2013, 2012, 2011, 2000 என பின்னால் செல்ல செல்ல ஒவ்வொரு வருடத் தமிழ்நாடு வெள்ள பாதிப்புகளையும் பலிகளையும் கூகிள் ஞாபகம் வைத்திருக்கிறது. நமக்குத்தான் மறந்துவிட்டது. நம் ஆட்சியாளர்களும் பாடம் கற்றுக்கொள்ளவில்லை.

இந்திய அரசியலமைப்புச் சட்டம் 51 ஏ, ஏரிகளும் ஆறுகளும் நீர்வழித் தடங்கள்; இவை பாதுகாத்து மேம்படுத்த வேண்டியவை என்கிறது. ஆனால், சட்டத்தை யார் மதிக்கிறார்கள்? ஆக்கிரமிப்பு காரணமாகச் சென்னையில் ஓடும் கூவம், அடையாறு மட்டுமல்ல தமிழ்நாட்டில் எல்லா ஆறு, ஓடை, ஏரி, குளங்களின் அகலமும் ஆழமும் குறைந்துள்ளது.

அதனை மீட்டெடுப்பதற்கான முயற்சிகள் ஒரு சில இடங்களில் அதுவும் பெயரளவில் மட்டுமே நடக்கின்றன. இதனால் அதிகனமழை பெய்யும் ஒவ்வொரு முறையும் கரையோர பகுதி ஊர்களையும் வயல்வெளிகளையும் வெள்ளம் மூழ்கடிப்பது தொடர்கிறது.

'இப்போது பெய்வதெல்லாம் பேய் மழை; மேகவெடிப்பு. என்னதான் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுத்திருந்தாலும் இழப்புகளைத் தவிர்க்க முடியாது' என்கிறார்கள் சிலர். ஆனால், சரியான திட்டமிடலும் நீண்ட கால நோக்கில் அமைக்கப்படும் திட்டங்களும் இருந்தால் சாத்தியம்தான் என்பதற்குப் பல உதாரணங்கள் உள்ளன. உலகில் பல நாடுகள் வெள்ள பெருக்கெடுக்கும் ஆறுகளை அடையாளம் கண்டு எப்போதும் வெகு கவனமாகப் பராமரிக்கின்றன. முன்னேறிய ஐரோப்பா, அமெரிக்க நாடுகள் கரையை உயர்த்தியும் தடுப்புத் தீவுகள் அமைத்தும் சுவர்கள் எழுப்பியும், கடலையே கட்டுப்படுத்தி வெள்ள பிரச்சினைக்குத் தீர்வு கண்டுள்ளன.

லண்டன் மாநகரத்தின் நடுவேதான் ஓடுகிறது தேம்சு நதி. அந்த ஆற்றின் குறுக்கே கட்டப்பட்ட மாபெரும் எந்திர தடுப்பு அரண்கள் ஒவ்வொரு வெள்ளப் பெருக்கிலிருந்தும் லண்டனைக் காப்பாற்றுகின்றன. பல முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளால் கடந்த 150 ஆண்டுகளாக வெள்ள அபாயத்தைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கிறது, ஆஸ்திரியா. கியூபா நாட்டில்தான் உலகிலேயே அதிக அளவில் புயல், வெள்ள பாதிப்புகள் ஏற்படுகின்றன. ஆனால், அந்த நாடு இதனால் நிலைகுலையவில்லை.

பருவநிலை மாற்றத்தால், இனிவரும் காலங்களில் மேக வெடிப்பு ஏற்பட்டு, சில மணி நேரங்களில் பல நாட்கள் பெய்ய வேண்டிய மழை கொட்டி தீர்த்துவிடுவதும், அதன் காரணமாக திடீர் வெள்ளப் பெருக்கு ஏற்படுவதும் அதிகரிக்கும் என்கிறார்கள் சூழியல் விஞ்ஞானிகள். எனவே, அதற்கேற்ப நம் நீர் வழித்தடங்கள் அகலப்படுத்தப்பட வேண்டும். ஆனால், அதற்கு மாறாகச் சுருங்குவதுதான் இங்கே நடக்கிறது. குறிப்பிட்ட பகுதியைப் பற்றிய புரிதல் இல்லாத அறைகுறையான திட்டமிடல்கள், அதுவும் முழுமையாக நிறைவேற்றப்படாத நிலை, ஆக்கிரமிப்புகள் எல்லாம் சேர்ந்து இன்று தமிழ்நாட்டை வெள்ள அபாய கோட்டில் நிறுத்தியிருக்கிறது.

குடிநீருக்கும் வேளாண்மைக்கும் மழை நீரைத் தேக்கி வைக்க ஊர்தோறும் ஏரி, குளம், குட்டை, ஊரணி அமைத்தார்கள் நம் முன்னோர்கள். அத்துடன் அவற்றை ஆயிரக்கணக்கான கால்வாய்கள் மூலம் ஒன்றுக்கொன்றுஇணைத்துபிரமாதமான ஓர் அமைப்பை உருவாக்கி இருந்தார்கள். மனித உடலுக்குள் பல்வேறு பகுதிகளுக்கும் ரத்தத்தைக் கொண்டு செல்லும் நரம்புகள் போல், தமிழ்நாடு முழுவதும் நிலப்பரப்பில் பரந்திருந்த இந்த நீர் வழித்தடங்கள் மழை நீரைக் கொண்டு சென்றது. தேவையான இடத்தில் பெருக்கி வைத்தது. ஓர் ஏரியோ குளமோ நிறைந்து மறுகால் போனால், அந்த உபரி நீர் அடுத்த ஏரிக்கோ குளத்துக்கோதான் போகும். அதனை நிறைத்துவிட்டு அடுத்த ஏரி, அடுத்த குளம். இப்படி ஒரு பகுதியில் பெய்யும் மழை நீர், மழை பெய்யாத பகுதிகளுக்கும் சென்று மக்கள் தாகம் தீர்க்கும்; பயிர் வளர்க்கும்.

தண்ணீர் அதிகம் செலவிடப்படும் நஞ்சை விவசாயத்துக்குப் பாய்ச்சப்படும் தண்ணீர் கூட விரயமாகாது. வயலிலிருந்து வடியும் அந்தத் தண்ணீர் அடுத்த குளத்துக்குச் செல்ல ஒரு நீரோடை இருக்கும். ஆறுகள் அனைத்தும் அவை செல்லும் பாதையோர ஏரி, குளங்களுடன் இணைக்கப்பட்டிருக்கும். ஆற்றில் ஓடும் தண்ணீர் ஏரி, குளங்களுக்கு வரும்; ஏரி, குளம் நிறைந்து வெளியேறும் தண்ணீரை ஆற்றுக்குத் திருப்பும். 2 ஆயிரம் ஆண்டுக்காலத்தில் உருவாகி வந்தது இந்த நீர் மேலாண்மை.

ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆண்ட காலத்தில்தான் முதல் முதலாக முக்கிய நகரங்களை இணைத்து ரயில் பாதை போடப்பட்டது. தூரத்தைக் குறைப்பதற்காக ஏரி, குளம் என நீர்நிலைகளின் நடுவேயும் ரயில் பாதை அமைக்கப்பட்டது. ஆனாலும், நீர்நிலைகளை அழித்துவிடக்கூடாது என்பதற்காக, ரயில் பாதையின் இடையில், தண்ணீருக்குப் பாலம் அமைத்து, இரண்டு பக்கத்திற்கும் தொடர்பை விட்டுவைத்தனர் வெள்ளைக்காரர்கள். அவர்கள் கூடக் கை வைக்காத நம் நீர் வழித்தடங்களை இப்போது நாம் சிதைத்துவிட்டோம்.

காலம்காலமாகத் தான் ஓடிய பாதை அடைக்கப்பட்டு விட்டதால், அனைத்துச் சென்ற கரைகள் சிதைக்கப் பட்டுவிட்டதால், குடியிருந்த வீடு களவாடப்பட்டுவிட்டதால், எங்கேசெல்வதுஎனத்தெரியாமல் திணறிக் கிடைத்த வாய்ப்புகளில் எல்லாம் ஓடுகிறது மழை நீர்.

இனிமேலும் காலம் கடத்தாமல், மழைக் காலங்களில் மட்டும் பேசிவிட்டு ஓய்வதாக இல்லாமல், அவசர பணியாக எடுத்துக்கொண்டு, நீர் மேலாண்மையில் ஆட்சியாளர்கள் அதிக கவனம் செலுத்த வேண்டும். ஆறு, ஏரி, குளங்களின் ஆக்கிரமிப்புகள் அகற்றப்பட வேண்டும்; மக்களும் தங்கள் பகுதி ஆறுகள், நீர்நிலைகள், மழைக்காலங்கள் குறித்த விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். ●

# விருதுகள் வரும் போகும் எழுத்து மட்டுமே நிலைபெறும்

**கே. சச்சிதானந்தன்**



**தமிழில்:**
**தி.இரா. மீனா**

*மலையாள கவிஞர் கே. சச்சிதானந்தன் விமர்சகர், மொழிபெயர்ப்பாளர், கல்வியாளர், நாடக ஆசிரியர் என்ற பன்முகம் கொண்டவர். 'காட்மாண்டு ட்ரியுபூன்' பத்திரிகைக்கு கே. சச்சிதானந்தன் அளித்த நேர்காணல் இது..*

*கவிஞர், விமர்சகர், கட்டுரையாளர் என்பதில் எந்த வகைக்குள் பொருந்துபவர் நீங்கள்? எழுத்தில் பல வருட அனுபவமும் பல்வேறு வகையான விருதுகளும் பெற்றுள்ள நீங்கள் உங்கள் சாதனைகளை எப்படிப் பட்டியலிடுவீர்கள்? இலக்கிய வாழ்க்கை உங்களுக்கு முழு திருப்தியைத் தந்திருக்கிறதா அல்லது ஏதேனும் அதிருப்தி உண்டா?*

அடிப்படையில் நான் என்னை ஒரு கவிஞனாகத்தான் பார்க்கிறேன்; நான் செய்கிற மற்ற விஷயங்களும் ஒரு கவிஞனின் பார்வையாகத்தான் வெளிப்படுகிறது. சான்றாக மலையாளக் கவிதை அழகியல் வரையறையில் பெரும் மாற்றத்திற்குள்ளான காலகட்டத்தில், மிகச் சில மொழிபெயர்ப்பாளர்களே இருந்த நிலையில், விமர்சன மென்பது அறிமுகமானது. புதினம் மற்றும் கலையிலும் இந்தப் புதிய உணர்திறனின் வரையறைக்குள் இல்லாத நிலை குறித்து நான் எழுதத் தொடங்கினேன். மொழிபெயர்ப்பும் இக்கால கட்டத்தில் புதிய உணர்திறனை நிலைநாட்டியது. மலையாளத்தில் புதுக் கவிதைக்கு வழிகாட்டியாக இருந்த அய்யப்ப பணிக்கரின் மேற்பார்வையில் வெளிவந்த 'கேரளக்கவிதா' என்னும் பத்திரிகையில் கவிதைகளை மொழிபெயர்க்கத் தொடங்கினேன். பணிக்கரின் மறைவிற்குப் பின்னால் 2006ஆம் ஆண்டு முதல் நான் ஆசிரியராக இருந்து வருகிறேன். எழுபதுகளின் சமூகச் சிக்கல்களை என் கவிதைகள் வெளிப்படுத்தியபோது, அதற்கு ஒரு வெளிப்படையான சமூகப் பரிமாணம் கிடைத்தது. நான் எழுத்தை ஒரு 'வேலை' ஆக நினைத்ததில்லை; அது உலகிற்கு என் இருப்பை காட்டுவதான பரிமாணம். அதனால் நான் விருதுகள், அங்கீகாரம் பெறுதல் ஆகியவற்றில் கவனம் காட்டவில்லை; அவை வரும் போகும். எழுத்து மட்டுமே நிலை பெறுகிறது.




மலையாள இலக்கியத்தின் புதுக் கவிதை இயக்கம் உங்களால் உருவானதா? அந்த இயக்கம் எப்படியானதென்று விளக்குவீர்களா? மரபு நிலைகளிலிருந்து விலக உங்களுக்கும் சமகால படைப்பாளிகளுக்கும் அது எப்படி உதவியது?

அது முழுமையாக என் உருவாக்கமில்லை. பகட்டான காதலைக் காட்டுவது என்னும் ஒரு நிலையிலேயே கவிதை மூழ்கிக் கிடந்ததால் இலக்கிய வரலாற்றை மாற்ற வேண்டிய தேவையிருந்தது என்பதை என்னைப் போலவே பல கவிஞர்களும் நினைத்தார்கள். அந்த மாற்றம் அழகியல் மற்றும் சமூகம் சார்ந்த பரிமாணமாக இருந்தது. அது இல்லாமை தத்துவவாதியாக இருக்கும் நிலையை எதிர்க்கும் நிறுவனமாக இருந்தது. ஆனால், எழுபதுகளில் எங்களில் சிலர் புதுமுறைகளில் கண்டனத்தை வெளிப்படுத்தத் தொடங்கினோம். அது கொந்தளிப்பான நேரம்; மாவோயிஸ்ட் இயக்கம் நிலமற்ற விவசாயிகளையும் பழங்குடியினரையும் ஒருங்கிணைத்தது; ரயில்வே - துறைமுகத் தொழிலாளர் போராட்டங்கள், பெண்ணிய இயக்கங்கள், தலித் இயக்கம் ஆகியவை உத்வேகம் கொண்டிருந்த காலம்; சூழலியல் விழிப்புணர்ச்சி வெளிப்பாடு - இவையெல்லாமும் சமுதாயத்திற்கும் எங்கள் கவிதைகளுக்கும் புது நம்பிக்கையைத் தந்து, மாற்றத்திற்குத் துணையாயின.

இதுவரை ஆன்மீக நித்தியவாதமாக இருந்த நவீனக் கவிதை வரலாற்றின் கண்களைத் திறந்தது; நடப்பு சிந்தனைகள் தேய்ந்த எண்ணங்களை வெளியேற்றியது; புதுவகைப் படிமங்கள், உருவகங்களைப் பயன் படுத்துதல்; அளவிகள் நீக்கப் பட்டோ அல்லது மாற்றப்பட்டோ இருத்தல், தளைகளிலிருந்து மீறிய உரைநடை ஆகியவை கவிதையின் வாகனங்களாக அமைந்தன. நாட்டுப்புற மரபுகள் சில சமயங்களில் பயன்படுத்தப் பட்டன. சந்தம் புதியதாக அமைந்தது.

எழுபதுகளின் கவிதைகள் நாடகபாணியில் இருந்தன, முதல்கட்டத்தில் தன்னுரையாக இருந்தவை உரையாடல்களாக மாற்றம் பெற்றன; பாத்திரங்கள் உருவாகி, அவை புதிய எழுச்சியும் வேகமும் பெற்றவையாயின. அதனால் மாற்றங்கள் மூன்று நிலைகளிலிருந்தது: கரு, மனப் பான்மை (மனிதனின் பார்வை), வடிவம்.

உங்களின் வாழ்க்கை முன்னர் ஏதுவாக இருந்தது? வித்தியாசமாக எழுத வேண்டும் என்ற வேட்கையை வலுவூட்டியதாகவா அல்லது மார்க்சிசம் மேல் கொண்ட விருப்பமாகவா? உங்களுடைய முனைவர் பட்ட ஆராய்ச்சி பின் அமைப்பியல்வாதத்தில் என்ன தாக்கத்தை ஏற்படுத்தியது? கேரளாவின் சமூக, அரசியல் அமைப்பு உங்களுடைய படைப்புகளில் உள்ளடங்கிய தாக்கம் பெற்றிருந்ததா?

எழுத்துதான் பிரதானமான விருப்பம். நான் பள்ளிக் காலத்தின் போதே எழுதத் தொடங்கிவிட்டேன். நான் தீவிரமாக எழுதத் தொடங்கிய நேரத்தில் மலையாளம் மற்றும் சில இந்திய மொழிகளிலும் புதுக் கவிதை வடிவம் எழுந்தது. நவீன அயலக மற்றும் இந்திய படைப்பாளிகளான ஜீபானந்த தாஸ், ஜி.எம். முக்தி போத், பி.எஸ். மார்தேகர், அய்யப்ப பணிக்கர் போன்ற படைப்பாளிகள் என்னைப் பெரிதும் கவர்ந்தனர். இடதுசாரி ஆதரவாளனாக நான் வளர்ந்தேன், எழுபதுகளில் என்

கவிதைகள் மாற்றம் பெற அது காரணம். என் முனைவர் பட்ட ஆராய்ச்சி பின்னாளில் எனக்குள் எழுந்த திறனாய்வுக்கான கேள்விதான். அது எந்த நேரடித் தாக்கத்தையும் என கவிதைகளில் ஏற்படுத்தவில்லை, ஆனால், மனித மனதும் மொழியின் புரிந்தலும் ஆழமானது அப்போதுதான்.

**முதலில் மலையாளத்தில் எழுதத் தொடங்கிய நீங்கள், பின்பு ஆங்கில மொழிபெயர்ப்பில் விருப்பம் கொண்டீர்கள். உங்கள் படைப்புகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க வேண்டுமென்று தோன்றியதுஏன்? மொழிபெயர்ப்பு என்பது மூலத்திலிருந்து மாற்றப்படும் போது உங்களுடைய எழுத்தை மதிப்பிழக்க செய்வதோடு சில சமயங்களில் கஷ்டமாகவும் இருக்கிறது என்று நினைக்கிறீர்களா? மலையாளம் கடினமான மொழிகளில் ஒன்று என்று கருதப்படுகிறது, ஆனால், உங்கள் படைப்புகளை மொழிபெயர்ப்பதில் நீங்கள் வெற்றி பெற்றிருக்கிறீர்கள். உங்களால் எப்படி ஓர் சிறந்த ஒரு மொழிபெயர்ப்பாளராக முடிந்தது?**

மொழிபெயர்ப்பாளராக ஆகவேண்டும் என்ற எண்ணம் எனக்குச் சிறிதும் இல்லை; முன்பே சொன்னது போல முதலில் பிற மொழிப் படைப்புகளைத்தான் நான் மலையாளத்தில் மொழி பெயர்த்தேன். ஆனால், சில ஆங்கில இதழ்களின் ஆசிரியர்கள் என் கவிதைகளை மொழிபெயர்க்க விரும்பினர். அதனால் நானே முயலலாமென நினைத்தேன். அதுதான் தொடக்கம். பிறகு அதற்கான தேவை அதிகமானது. டெல்லி நிராலா பதிப்பகத்தைச் சேர்ந்த ஆர்.டி. யுயுஸ்து (Yuyutsu) என் மலையாளக் கவிதைத் தொகுப்பை மொழிபெயர்ப்பு செய்வது குறித்து எழுதினார். அப்படித்தான் என் முதல் கவிதைத் தொகுப்பான 'Summer Rain' வெளிவந்தது. அதன் பிறகு, பல படைப்புகள். மலையாளம் அறியாத வாசகர்களை அடைந்துவிடும் வேகத்தில் இருந்தேன். 'Summer Rain' வெளி வந்த பிறகு 'How to Go to the Tao Temple', 'So Many Births', 'Stammer and other Poems', 'Imperfect and Other Poems and While I Write' என்று பல. இந்தி உள்ளிட்ட இந்திய மொழிகள் தவிர, பிரெஞ்சு, ஜெர்மன், ஐரிஸ், இத்தாலி மற்றும் அராபிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டது. பல மூலத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டன; சில என்னுடைய ஆங்கில வடிவம் அல்லது மற்றவர்களால் மொழி பெயர்ப்பு செய்யப்பட்ட இந்தி மொழியிலிருந்து வெளியாயின.

நான் ஒரு சிறந்த மொழி பெயர்ப்பாளரா என்பது எனக்குத் தெரியாது. வட்டாரப் பண்பாடு, ஞாபகங்கள், இயற்கை வனப்பு ஆகியன குறித்த ஆழமான பின்னணி கொண்ட மலையாள வாசகர்களுக்கு, மிக விருப்பமான என்னுடைய சில கவிதைகளை மொழிபெயர்க்க எனக்குத் தைரியமில்லை. எதிர்காலத்தில் ஒரு நல்ல மொழிபெயர்ப்பாளர் ஆங்கிலத்தில் அவற்றை மொழி பெயர்க்கலாம். என் கவிதை களில் நான்கில் ஒரு பங்கே இதுவரை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. இந்த மொழி மாற்றத்தில் ஏற்படக் கூடிய படுகுழிகள் பற்றி எனக்குத் தெரியும். எனினும் ஆங்கிலத்தின் ஆளுமை அதிகமில்லாமல் என் கவிதைகளுக்கு அதன் மூலத் தன்மையை அப்படியே தருவதில் உண்மையானவனாகவே இருக்க முயற்சித்திருக்கிறேன். இந்தியா போன்ற பன்மொழி கொண்ட நாட்டில் மொழிபெயர்ப்பின்றி ஒரு மூல மொழியை அறிவதற்கான சாத்தியக் கூறுகளே இல்லை.

**உங்கள் மதச்சார்பற்ற ஆன்மீகக் கொள்கை, வட்டாரக் கலாச்சார அடையாளம் ஆகியன உங்கள் சமுதாயம் மற்றும் வட்டாரம் சார்ந்த விருப்பத்தை வலியுறுத்துகிறது. நீங்கள் கேள்வி எழுப்புகிற, வெறுக்கிற சிக்கல்களை மாற்றுவதில் எந்த அளவிற்கு வெற்றி பெற்றிருக்கிறீர்கள்? உங்கள் எழுத்து எந்த வகை? எளிமையாகச் சொன்னால், ஒரு கவிஞனாக எப்படி உங்களை வரையறுப்பீர்கள்?**

இந்தியாவின் பாரம்பரியங் களில் மதச்சார்பற்ற ஆன்மீகம் மிக முக்கியமானது என்று நம்புகிறேன். இது குறிப்பாக பக்தி மற்றும் சூஃபி கவிஞர்களிடம்; திருமூலர், பசவர், கபீர் தொடங்கி லாலன் பகிர் (Lalan Fakir), பாபாஃபாரித் (Baba Farid), புலே ஷா (Bulle Shah) வரை. இவர்கள் மதகுருமார்களின் சமயம் என்பதற்கு மாற்றாக மக்கள் சமயம் என்ற நிலைக்கு எடுத்துச் சென்றவர்கள். இவர்கள் சாதி எதிர்ப்பு, மதவெறி, எல்லா வகைகளிலுமான அதிகாரப் படிநிலை என்ற உலகின் நிலைகளை வெறுத்து சமநோக்கு சமுதாயத்தைப் பற்றிய கனவு கண்டனர். இந்த கவிஞர்கள் சமுதாயத்தின் ஒதுக்கப்பட்ட பிரிவுகளிலிருந்து வந்தவர்கள்.

நான் ஒரு கூட்டாட்சிவாதி. இந்தியாவின் ஒவ்வொரு வட்டாரமும் தன்னாட்சி நிலையில், தனக்கான முன்னேற்றம், வளர்ச்சிப் பாதையைத் தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பெற வேண்டும். இப்போது, நடைமுறையில் இருப்பதைப் போல வளர்ச்சிக் கான எல்லாவற்றின் மீதும் ஒரு முதலாளித்துவ கருத்தைத் திணித்துச் செயல்படுவது தவறாகும். மிக அதிகமாக மையப் படுத்துதல் என்பது அதிகாரத்தை ஓரிடத்தில் குவிப்பதாக அமைந்து அதன் பலனாக எழும் பேராசையும் ஊழலும் ஜனநாயகத்திற்குக் கேடாகிவிடும்.

நான் வெற்றி அடைந் திருக்கிறேன் என்று சொல்ல மாட்டேன். மதம் சார்ந்த மரபுக் கோட்பாட்டாளர்கள் சமுதாயத்தின் மிகப் பெரிய அச்சுறுத்தல்வாதிகள். மத்திய ஆளுமை உள், வெளிநாட்டு மூலதனத்தில் பெரும் பங்கு வகிக்கிறது. உணர்வு டையவகளால் மட்டுமே ஒரு மாற்றத்தைக் கொண்டு வர முடியும். ஒரு கவிஞனாக, பெரும்பான்மை மக்களின் நிலை



பற்றி கவலைகொள்கிறேன்; தனி மனித நிலைக்காகவும்; என் இறுதி பேச்சுப் பொருள் மனித நிலைதான், ஆனால், விலங்குகளும் தாவரங்களும்கூட என் மனித உலகின் ஒரு முக்கிய பகுதிதான்.

மொழிபெயர்ப்பு இலக்கியத்தின் முக்கிய பிரிவா? இதுவரை நீங்கள் எதிர்கொண்ட சவால்கள் என்ன? மூலத்தோடு ஒப்பிடும் போது மொழிபெயர்ப்பு படைப்புகள் தரம் குறைந்து உள்ளவை என்று குறிப்பிடப்படுகிறது. ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு மாற்றும் போது பொருள் மட்டும் மாறுவதில்லை; சில சமயங்களில் குறிப்பிட்ட சொற்கள், பொருள் மொழிபெயர்க்கக் கடினமாகி விடுகிறது. இந்த வகையான சிக்கல்களைச் சந்தித்து இருக்கிறீர்களா? மூலத்தை அப்படியே மொழிபெயர்ப்பில் கொண்டு வரமுடிந்ததா?

மொழிபெயர்ப்பிற்கென்று சில பிரச்சினைகள் இருக்கின்றன. அவை குறிப்பாகப் பண்பாடு சார்ந்தவை. மூலத்தின் இயல்பைப் பொறுத்து ஒருவர் வெவ்வேறு வகையான உத்திகளைக் கையாண்டு அச்சிக்கல்களிலிருந்து விடுபடலாம். அது ஆழமான உள்ளார்ந்த வாசிப்பு சார்ந்தது. ஒரு படைப்பாக்கச் செயல்முறையில் மூலத்திற்கு இணையான பொருளை ஜனிக்க வைத்து, மூலத்தின் நுட்பங்களை வெளிக்கொண்டு வருகிறோம். நான் முன்பே சொன்னது போல வட்டாரச் சார்பு அதிகமுடைய கவிதைகளை மொழிபெயர்ப்பதை மிகக் கடினமாகவே உணர்கிறேன்; பொதுவான கருக்களைக் கொண்ட கவிதைகள் சிறிது எளிமையானவை. மீண்டும் மூலத்திற்கும் குறிப்பிட்ட இலக்கு மொழிகளுக்குமான தொடர்பு மிக கவனத்திற்குரியது. தமிழ் அல்லது கன்னடம் போன்ற திராவிட மொழிகள் மலையாளத்தைப் போல இருப்பதால் மூலத்தை என்னால் பெரும்பான்மை தக்கவைத்துக் கொள்ள முடியும்; இந்தி அல்லது வங்காளம் உள்ளிட்ட இந்தோ - ஆரிய மொழிகளின் இலக்கணமும் தொடரியலும் மாறுபடுவதால் அவற்றைமொழிபெயர்ப்பதுமிகக் கடினம். அயலக மொழிகளெனில் இது இன்னமும் சிரமமானது. அவை பண்பாட்டையும் அதன் பின்னணியிலான நெறிமுறையையும் மிகக் குறைந்த அளவில் வெளிப்படுத்துகின்றன. இருப்பினும் ஒரு புதிய அழகியல் / சமூகப் பொறுப்பு சூழலை உருவாக்க முயல்கிற செய்தியும் நடத்து முறையும் கொண்டிருக்கிற கவிதைகளை என் ஆங்கில வடிவிற்குத் தேர்வு செய்கிறேன். எதிர்வினைகளைப் பார்க்கும்போது மொழிபெயர்ப்பு பெரும்பான்மை பலனளித்திருக்கிறது. இதற்கு ஆங்கிலத்திற்குப் பொருந்தும் வகையிலான கவிதைகளை மட்டுமே நான் தேர்வு செய்வதும் காரணம்.

பல பத்திரிகைகளுக்கு நீங்கள் பதிப்பாசிரியராக இருந்திருக்கிறீர்கள். இது உங்களது எழுத்தை எந்த அளவில் பாதித்தது? ஓர் இலக்கிய இதழ் உண்மையாகவே ஒருவரின் படைப்பாற்றலுக்கு உதவுமா? மாறும் இன்றைய உலகில் இலக்கிய இதழின் பங்கும் பணியும் எப்படி இருக்க வேண்டும் என்று நினைக்கிறர்கள்? தெற்காசிய சூழலில் இது முக்கியமானதா?

பரிசோதனை முயற்சியாக நான் சில சிற்றிதழ்களைத் தொகுத்திருக்கிறேன்; அவை எப்போதும் வெறும் படைப்பிலக்கியமாக மட்டும் இருந்ததில்லை, சில சமயங்களில் கலை, அழகியல், அரசியல், சமூகவியல், இலக்கியக் கொள்கை ஆகியவற்றோடு தொடர்புடையதாக இருந்திருக்கிறது. அது ஒரு வகையில் பரந்த என் படைப்பு வெளிப்பாடாக இருந்தவை; திரைப் படங்களைப் போல; இயக்குநருக்கு இருக்கிற பார்வை மற்றவர்களால் - நடிகர்கள், பாடகர்கள், புகைப்படக் கலைஞர்கள் உள்ளிட்டவர்களால் - செயல் படுத்தப்படுவதைப் போல. பரீட்சார்த்த முறையில் நான் முதலில் பதிப்பித்த பத்திரிகை ‘ஜுவாலா’. அதன் பிறகு ‘உத்தரம்’, ‘பச்சைக் குதிரை’ ஆகியவை மலையாள மொழியிலும் ‘Indian Literature in English’இலும் பதிப்பிக்கப் பட்டவை. ‘கேரளக் கவிதா’ என்னும் ஒரு கவிதை இதழைத் தொகுத்துக் கொண்டிருக்கிறேன். அது புதிய தலைமுறையின் பங்கான வலைத்தளம் (Blog Writing) உள்பட, இந்திய, அயலக படைப்பாளிகளின் மொழிபெயர்ப்பு கவிதைகள் மற்றும் கட்டுரைகள்

ஆகியவற்றைப் பிரசுரிக்கிறது. இது என் கவிதையை விட என் திறனாய்வுக்கு உதவுவது. இலக்கிய இதழியல் என்பது சிந்தனை, அனுபவம், மாற்றம் சார்ந்தது என்பதால் தெற்காசிய நாடுகளில் இலக்கியம் முக்கிய பங்கு வகிக்கிறது.

உங்கள் தாய்மொழியில் எழுதி, பின்பு அதை ஆங்கிலத்தில் நீங்கள் மொழிபெயர்க்க என்ன காரணம்? உங்கள் மொழியின் மேலான காதலா அல்லது குறைந்த எண்ணிக்கையில் ஆங்கிலத்தில் எழுதும் இந்தியக் கவிஞர்களின் குறுக்கீடா? பல இந்திய கவிஞர்கள் மிகத் தரமான படைப்புகளை உருவாக்கும் போது அவர்கள் சிறுபான்மை எழுத்தாளர்கள் என்று கேலி செய்யப்பட்டனர், அவர்களின் தரம் குறைந்த படைப்புகள் தாய்மொழியில் எழுதும் படைப்பாளிகளோடு ஒப்பிடப்பட்டன. வெறும் புகழுக்காக மட்டும் இல்லை, இந்தியாவில் ஓர் ஆங்கில எழுத்தாளர் என்றாலே செய்யப் படுகிற மீளாய்வும் பரிகாசமும் பல எழுத்தாளர்களைக் காலனித்துவ மொழியில் எழுதுவதைத் தடுத்துவிட்டன. அது பற்றி உங்கள் கருத்து?

ஆங்கிலத்தில் எழுதுவதற்கும் தாய்மொழியில் எழுதுவதற்கும் இடையே எந்த வித்தியாசமும் எனக்கு தெரியவில்லை. நான் திறனாய்வு பற்றி ஆங்கிலத்தில் நிறைய எழுதியிருக்கிறேன். இந்திய இலக்கியம் குறித்து நான்கு புத்தகங்கள் எழுதியிருக்கிறேன். நான் கேரளாவில் வளர்ந்தவன், அந்தச் சூழலில் உயிர்த்து வாழ்ந்ததால் மலையாள மொழியில் மிக இயல்பாய் எழுத முடிகிறது. என் ஞாபகங்களும் கனவுகளும் மலையாளத்தில் இருக்கின்றன. இது எல்லோருக் கும் கிடைக்குமென்று சொல்ல முடியாது, குறிப்பாக இளைய தலைமுறையினருக்கு. தனக்கு இயல்பாகவருகிறமொழியில்தான் ஒருவர் எழுத வேண்டும்.

இந்தியாவில் ஆங்கிலத் தில் மிக நல்ல படைப்பு கள் வருகின்றன. பல நூற்றாண்டு களாகவே மொழி இலக்கியம் தனக்கான பாரம்பரியத்தோடு மிக அதிகமான, அற்புதமான படைப்புகளை உருவாக்கி வருகிறது. அண்மைக் காலத் தில் தாய்மொழியிலிருந்து ஆங்கிலத்திற்கு மொழி பெயர்க்கப்படும் படைப்புகளின் எண்ணிக்கை மிக அதிகமாகி யிருக்கிறது; வாசித்தல், விமர்சித் தல், பாராட்டுதல், பரிசளித்தல் என்று அதன் எல்லை விரிகிறது.

சில விருதுகள் பெற்றிருக் கிறீர்கள் என்பதோடு 2011இல் இலக்கியத்திற்கான நோபல் பரிசிற்கும் பரிந்துரை செய்யப்பட்டவர் நீங்கள். உங்கள் பயணம் எப்படியிருந்திருக்கிறது? உங்கள் படைப்புகளால் நிறை வடைந்திருக்கிறீர்களா? எழுது வதை விட்டுவிடலாம் என யோசித்திருக்கிறீர்களா அல்லது கடைசி மூச்சு உள்ளவரை எழுத ஆர்வமா?

விருதுகளும் அங்கீகாரமும் நான் முன்பே சொன்னது மாதிரி, தொழில் சார்ந்த ஆபத்துகள்; ஒரு படைப்பாளியோடு சமுதாயம் தன்னைத் தொடர்புபடுத்திக் கொள்ளும் சில வழிகள். நோபல் பரிசு பெற்ற பல எழுத்தாளர்கள் கூட முழுமையாக மறக்கப்பட்டுள்ளனர். எந்த விருதும் பெறாத பலர் இன்றும் நினைவில் நிற்கின்றனர். அதனால் விருதுகள் எழுத்தின் திறத்தை தீர்மானிக்கிறவையில்லை. அது காலத்தையும் மனிதர்களையும் பொறுத்தது. காலத்திற்கு ஒவ்வாத எழுத்து, மனதைத் தொடாத எழுத்து - இரண்டும் ஏற்கப் படுவதில்லை. முடிந்தவரை நன்றாக எழுத முயற்சி செய் வதைத் தவிர எனக்கு அதில் எந்தப் பங்குமில்லை. எழுத்தைக் கைவிடும் எந்தத் திட்டமும் தற்போது எனக்கு இல்லை.

கவிஞன் என்பவன் யார்? ஒருவர் எப்படி கவிஞராக முடியும்? அவர்கள் சமுதாயத் திற்கும் உலகிற்கும் நிஜமாகவே பங்களிக்கிறார்களா? கவிதை வாசிப்பவர்களுக்கும் எழுதுபவர் களுக்கும் உங்கள் செய்தி?

இந்தக் கேள்விகளுக்கு தெளிவான பதில் என்னிடம் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! என்னைப் பொறுத்த வரை கவிதை என்பது இயற்கை; அது ஒரு சமூக நிகழ்வு, அதே நேரத்திலது அழகியலும் நெறிமுறை முறையும் சார்ந்தது. உண்மையை நுட்பமாக, தெளிவாக குறிப்பாகத் தெரிவிக்கிற ஒரு வழி. ஒரு குறிப்பிட்ட முறையில் நாம் கவிதையை வரையறுக்கும் போது, அந்த வரையறையை விசாரணைக்குள்ளாகும் ஒரு கவிஞனின் கவிதை எதிர்ப்பட்டு அது கவிதையாகவே நிற்கும். அதனால், இயற்கையாகவே அது மாறிக்கொண்டும் தனக்குள்ளே புதிதாகிக் கொண்டும் இருக்கிறது. அதே கவிஞனும் தன்னை உருமாற்றம் செய்துகொள்கிறான். மீள் நிகழ்வுகளைப் பயன் படுத்தினால் அவனோ அல்லது அவளோ - அவர்கள் உயிரற்ற கவிஞர்களாகி விடுவார்கள். கவிஞர்களுக்கும் ஒரு சமுதாய பங்குண்டு; சொல்லப் போனால், அது ஒரு விஞ்ஞானி அல்லது ஓர் அரசியல்வாதி ஆகியோரின் பங்கு போன்றதல்ல. கவிஞர்களாக அவர்கள் அரசியல் வண்ண உருவெளிவடிவத்திற்கு அப்பாலான பார்வை கொண்டவர்கள்; எதிர்காலத்திற்கான தீர்க்க தரிசனத்தை உருவாக்குபவர்கள்; அவர்கள் வெளிப்படுத்துகிற உண்மையின் உட்பொருள் உடனடியாக பற்றிக்கொள்ளப் படாமல் போகலாம். கண்ணுக்குத் தெரியாதைத் தெரிய வைப்பார்கள், பெயரற்றதற்குப் பெயரிடுவார்கள், கன்னிநிலத்தைஏற்றம்செய்வார்கள். சொல்வதற்கு என்னிடம் செய்தி எதுவுமில்லை; நானே புதிதாக கற்றுக்கொள்பவன்தான். உங்களுக்கும் உங்கள் நேரத்திற்கும் உண்மையாக இருங்கள். வேறு எதுவும் செய்ய முடியாது. ●

**தி.இரா. மீனா**
meenmix@yahoo.com

*நன்றி:* Kathmandu Tribune, 19 Jan 2018; ஆங்கிலத்தில்: *அருண் புததோகி* (Arun Budhathoki)

கவிதை

# யானை

த. அரவிந்தன்



ஓவியம்:
இரினா



லாரியில்
ஏற்றப்பட்ட யானைக்கு
தும்பிக்கையையும்
வாலையும்
எங்கே வைத்துக்கொள்வது எனத் தெரியவில்லை
லாரியில் ஏற்றியவன்
அவற்றை
நீளமாகவே கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை
தலைக்கேறிய கோபத்தில்
யானை
தும்பிக்கையாலும்
வாலாலும்
அந்த லாரியைச் சிதைத்து
சின்னாபின்னமாக்கி
அவற்றின் நீளத்தைக் காட்டலாமா என்றுகூட
யோசித்தது
பிறகு
முட்டாப்பயளுக்கிட்ட
என்ன கிடக்கு போ என்று
தும்பிக்கையை
முன்னங்கால்களுக்கு இடையிலும்
வாலை
பின்னங்கால்களுக்கு இடையிலும்
நுழைத்துக் கொண்டது. ●

**த. அரவிந்தன்** <thavaram@gmail.com>

சிறுகதை

# விஷ் யூ ஹாப்பி நியு இயர்

**மணி எம் கே மணி**



**ஓவியம்:**
**டுவைன் பெல்**

தேவகியைப் பற்றி என்ன சொல்லலாம்? வழக்கமான ஒருத்தி. காலையில் எழுந்து முகம் கழுவின கையோடு, குவிந்திருக்கும் பாத்திரப் பண்டங்களை விளக்குவாள். அடுப்பைப் பற்ற வைப்பாள். ஏறக்குறைய இரவு வரைக்கும் அதைச் சுற்றி வர வேண்டியிருக்கும். முன்பெல்லாம் தனியாக இருந்த மனக் கவலைகள் எல்லாமும்கூட சலிப்புடன் நகர்ந்துவிட்டன. பெண் ஜென்மம் என்பதை அனுபவ ரீதியாக உணர்ந்துகொண்டு விட்டாள். சொல்லப்போனால் அவள் தொடர்ந்து பார்க்கக் கூடிய தொலைக்காட்சித் தொடர்களில் வரக்கூடிய நாயகிகள் எவ்வளவோ வதைபடுகிறார்கள். ஒரு குறுகிய கால வாழ்க்கைக்குள் அவர்களுக்கு முதலிரவு நடப்பதில்லை; விபத்து நடந்து மருத்துவமனையில் படுப்பார்கள். போலீஸ் அரஸ்ட் பண்ணும், ஜெயிலில் கிடப்பார்கள், அங்குக்கூட அவர்களைக் கொல்ல முயற்சி செய்வார்கள், புருஷன் வைப்பாட்டி வைத்துக் கொள்வான், மாமியார் தூஷிப்பாள், நாத்தனார் சதி செய்வாள், கொஞ்ச நாள் பைத்தியம் பிடித்திருக்கும்; யாராவது ஒரு வாலிபனுடன் நல்ல நட்புடன் இருக்க, அதை ஊர் உலகம் சந்தேகப்படும். இதெல்லாம் சரிதான், ஆனால், தேவகிக்கு இதில் ஒன்றாவது நெஞ்சைத்தொடுவது கிடையாது. என்ன கருமம் இதெல்லாம் என்று அலுத்துக் கொள்ளுவாள். தின்று தூங்கி அப்படியே சுரணை கெட்டு கொண்டிருக்கையில் வீட்டு உரிமையாளரின் மகன் தன்னை நோக்கி தன்மையோடு முறுவலிப்பதை ஒருநாள் கவனித்தாள்.

தன்னை இன்னும் கொஞ்சம் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும் போலத் தோன்றிற்று.

கூந்தலை சீராக வாரிக் கொள்ள ஆரம்பித்தாள்.

அவன் அவளைக் கடந்து போகும்போது ஏதாவது சொல்லுவது வழக்கம். அது புரியாது. அது ஒரு ஜோக்காக இருக்கலாம். காமம் உள்ளில் நாய் வால் அசைக்கும்போது அவனுக்கு அது உருண்டு திரண்டு வராமல் மக்கர் செய்வதாயிருக்கலாம். என்றாலும் தேவகி புரிந்தவரை சின்னதாக சிரித்து வைத்தாள். என்னவோ



ஒன்று நடக்கப்போகிறது என்கிற கிளர்ச்சியால் அவள் உடம்பில் எப்போதுமிருந்த களைப்புகளும் அவஸ்தைகளும் விலகின. பகல் தூக்கம் மட்டுப்பட்டது, அடிக்கடி கனைக்க ஆரம்பித்தாள், சப்தம் அதிகரித்த ஒரு கொலுசை மாற்றிக் கொண்டாள். அப்படியாக அவன் ஒருநாள், அர்ச்சுனன் எந்த சிகரெட் பிடிப்பான் என்று கேட்டான். இவளுக்கு என்ன தெரியும்? அவன் வில்ஸ் என்றான். அதில் தான் வில் இருக்கிறது என்றான். அதை சொல்லி விட்டு அவன் வாய்விட்டு சிரிக்கும்போது அவனது தெற்றுப் பல்லை பார்த்தாள். அது அழகாக இருக்கிறது என்று பட்டது. அவன் அதிகம் தாமதிக்கவில்லை. வருடம் முடிய போகின்ற இந்த டிசம்பர் முப்பத்து ஒன்று அன்று சாயந்தரமாக, "நான் எதிர்பார்க்கிற புது வருடப் பரிசு கிடைக்குமா?" என்று கேட்டான். "பயமில்லாமல் மொட்டை மாடிக்கு வர முடியுமா?" என்றும் கேட்டான்.

"எனக்கென்ன பயம்? நீங்க

என்னை ரேப்பா பண்ணி விடப் போகிறீர்கள்?"

இரவு ஒன்பது மணி அளவில், மொட்டை மாடியில் அவன் கேட்ட முத்தத்தைத் தருவதாக அவள் ஒப்புக் கொண்டாள். ஆனால், அந்த நேரத்தைத் தொடுவதற்கு நெருங்கும்போது நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்கிற சுழலில் திமிறினாள். அவனைப் பாவம் என்று நினைத்துக்கொண்டாள். மாடியில் ஏறுவதற்கு முன்னால், மற்ற குடித்தனக்காரர்கள் எல்லோரும் எங்கே இருப்பார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டுமில்லையா?

அதற்கு முன்பு அவளது புருஷன் எங்கே இருக்கிறான் என்பதை உறுதிப் படுத்திக் கொள்ள வேண்டி யிருந்தது.

செல்லில் கேட்டாள். "எங்கே இருக்கிறீர்கள்?"

"அடச்சீ, போனை வை!"

பசுபதி சொன்ன பதில் அவ்வளவுதான்.

டேவிட்டும் ஆலனும் புத்தாண்டு விசேஷ பிரார்த்தனையில் கலந்து கொள்ளும்பொருட்டு சர்ச்சுக்குள் போயிருந்தார்கள். இவனும் சாமிக்கண்ணுவும் லோகாவும் கல்லறை குட்டிச்சுவரின் மீது குந்தியிருந்தார்கள். எவ்வளவு புகைக்க வேண்டுமோ, அதைக் காட்டிலும் அதிகமாக புகைத் தாயிற்று. இப்போது வயிறு புகைவதில் யாருக்கும் சிகரெட் பற்ற வைக்க தோன்ற வில்லை. குடிக்கப் போக வேண்டியிருப்பதால் எதையாவது சாப்பிட்டு வைக்கவும் முடியாது. இருந்தாலும் தாஸ் வந்து சேர்ந்த போது கையோடு குழியப்பம் வாங்கிக்கொண்டு வந்திருந்தார். குடிக்கு எண்ணை வைரியாக இருந்தாலும் பசியில் ருசித்து சாப்பிட்டு கொண்டார்கள். தாஸ் ஒரு எழுத்தாளர் என்பதாலும் அவர் சினிமா பற்றி பேசுகிறவர் என்பதாலும் டேவிட்டும் ஆலனும் வருகிற வரையில் நேரம் போயிற்று.

சட்டென்று ஆலன் பாடினான்.

"அல்லேலூயா உமக்கே,<br>அல்லேலூயா உமக்கே !<br>ரத்தத்தை சிந்தி எங்களைக் காத்த<br>அல்லேலூயா உமக்கே!"

மற்றவர்களும் திரும்பப் பாடினார்கள். சர்ச்சை போர்த்தி யிருந்த வர்ண விளக்குகள் அவர்கள் மீதும் அவர்களை வேடிக்கை பார்த்தவர்களின் மீதும் எதிரொளித்தது. எவ்வளவு கூட்டம்? குழந்தைகள், பெண்கள், ஆண்கள்? ஏசப்பா வுக்கு ஜாலிதான். பாட்டை சட்டென நிறுத்தி கிளம்பி னார்கள். கோட்டர்சுக்கு மூன்று கிலோமீட்டர் தூரமிருக்கலாம். பழுதடைந்த வீடுகள் குப்பைக் கூளங்களுடன் வெறித்துக் கொண்டு கிடந்தாலும் ஏற்கனவே ஒரு பகுதியை சீரமைத்து வைத்து செட்டப்பாக இருந்தது. சரக்கும் சாப்பாடும் வந்த பின்னர் விருந்து துவங்கியது. மச்சி, மச்சான், மாமா, மாப்பிள்ளைகள் கோப்பைகளை உயர்த்தினார்கள். சியர்ஸ், சியர்ஸ். அது சரியாக பன்னிரண்டு மணி வரை தொடர்ந்து புத்தாண்டு சந்தோஷங்கள் துவங்கின. பட்டாசுகளை அள்ளி வந்து கொளுத்தியது வேறு ஒரு ஜமா. கட்டி அணைத்து, கை கொடுத்து பாதுஷா வழங்கி கலாட்டா பண்ணிவிட்டு சென்றது மகா சிவா என்கிற வேறு ஒரு அணி. பூங்காவனம் பேங்கூஸ் அடித்தான். முடிந்த அளவில் எல்லோரும் கொஞ்சம் ஆட்டம் போட்டார்கள். ஜூனியர்ஸ் அதிகமாக கூச்சலிட்டு அத்துமீறல் பண்ணிக் கொண்டிருக்கவே இவர்கள் அங்கிருந்து நழுவி ஆப்பம் சிக்கன் சாப்பிட்டு கோட்டர்சில் போட்டு வைக்கப்பட்டிருந்த ராட்சச குழாய்களின் மீது, அதன் இடுக்குகளில் படுத்துக் கொண்டார்கள்.

நான்கு மணி வரைதான் தூங்க முடியும்.

நான்கு மணிக்கு சர்ச்சில் வேறு ஒரு பிரேயர்.

ஜொலி ஜொலிப்பில் ததும்பிக் கொண்டிருந்த அந்த பகுதியில் மக்கள் நிறங்களோடு ததும்பினார்கள். தழுவிக்கொள்ளவே பிறந்தவனா மனிதன்? அத்தனை பேரும் தங்களை சந்தோஷத்தின் மீது நிறுத்தி வைத்துக்கொண்டு, அது நழுவி விடுமோ என்கிற சந்தேகத்தில் வலுக்கட்டாயமாக தங்களை நிறுவிக்கொண்டார்கள். அங்கே யாருமே தங்களைப் பொருத்திக்கொள்ள வேண்டும்.

வா, வா, வா போலாம்.

வைன் ஷாப்பை திறக்க மாட் டார்கள். பக்கவாட்டு படிகளின் வழியாக ஏறி பாரின் கதவைத் தட்டினால் பஷீர் கதவைத் திறந்தான். மொட்டைமாடியில் அவன் நாற்காலி, மேஜைகளைப் போட்டான். கேட்ட சரக்கு வந்தது. இதர பொருட்கள் வந்தன. இரண்டு பெக்குகளுக்கு அப்பறம் சாந்தி, சமாதானம் வந்தது. எல்லோரும் நிதானித்தார்கள். சுவாரஸ்யமாக ஒரு பேச்சு நடந்து கொண்டிருந்து, அதற்கு ஒரு இடைவெளி விழுந்த போதுதான் எல்லோரும் குளிர்வதை உணர்ந் தார்கள். விடியல் இறங்கிக் கொண்டிருந்தது. ஒருவர், மற்றொருவர் என்று பெரிய சுரணை எதுவும் இல்லாமல்கூட தங்களை சுற்றியிருந்த உலகை அவர்கள் கவனிக்கத் துவங்கினர். சரியாக அதை சொல்லிவிட முடியாது, அது ஒரு இடைவெளியேதான். ஒருகணம் தங்களுடைய அனாதித் தருணம் வெளிப்படும் துயர் நொடிகள் துடித்தன.

ஆலன் ஆரம்பித்தான்.

அது ஒரு கானா. மாம்பழம் பற்றியது. அப்படித்தான் அந்த



நிகழ்ச்சிகள் துவங்கின. பூங்கா வனம் பழைய ஆள். அவனுக்கு இதுதான் வயது என்று யாராலும் சொல்ல முடியாது. அவன் யாரோடெல்லாம் இருந்திருக் கிறான் என்பதையும் சொல்ல முடியாது. 'மகான் காந்தி மகான்' கண்ணீரோடு பாடுவான்; 'அழைக்காதே' பாடுவான்; 'காவேரி ஓரம் கவி சொன்ன காதல்' பாடுவான்; 'பிறக்கும் போதும் அழுகின்றான்' சந்திரபாபு பாடலுக்கு எழுந்து கொள்வான். அது ஒரு மென்னசைவு நடனம் என்று வைத்துக்கொள்ளுங்கள். 'அன்னையின் கையில் ஆடுவ தின்பம், கன்னியின் கையில் சாய்வதும் இன்பம், தன்னை அறிந்தால் உண்மையில், இன்பம் தன்னலம் மறந்தால் பெரும் பேரின்பம்' என்று விட்டு 'பெரும் பேரின்பம்' என்று உருகுவான் பாருங்கள், யாரும் கண்ணீர் உகுத்து விடுவார்கள். அவ்வப்போது நிகழும் இவை ஒவ்வொன்றாக வரிசையாக நடந்து முடிந்திருந்தன. குடிமக்கள் சுற்றிலும் இருந்து குடித்துக் கொண்டிருந்தார்கள். பொதுவில் ஒரு பாராட்டு முகம் சென்று கொண்டிருந்தது. முக்கியமாக துறைமுகம் ஆள் என்று சொல்லிக்கொண்ட துரை மற்றும் அவர்களுடைய குழுவினர் அளவுக்கு மீறி இவர்களைக் கொஞ்சிக் கொண்டிருந்தார்கள். அதிலிருந்து ஒரு விபரீதம் வரும் என்கிற சந்தேகமிருந்தது.

தாஸ் ஒரு வேண்டுகோள் வைக்க, ஆலன் பாதியில் இருந்து அந்தப் பாட்டை எடுத்தான்.

'கோட்டு சூட்டு போட்டு ஐயா அங்க போகல
எழுதி வச்ச சுருதி நோட்டு கோதாவுல தோக்கல
ஆசியா கண்டத்துல யாரும் இத செய்யல
கேள்விப்பட்ட தமிழனுக்கு நெஞ்சு இன்னும் அடங்கல'

என்பதில் ஆழ்ந்திருக்கும் போதுதான் அங்கிருந்து ஒரு நாற்காலி பறந்து வந்து பசுபதியின் மீது விழுந்தது. துரையும் ஆட்களும் குடித்து நிரம்பியிருந்தார்கள். அவர்கள் கேட்ட ஏதோ ஒரு பாட்டை பாடவில்லையாம். ஆலன் பாய்ந்து சென்று துரையை ஒரு அறை விட்டான். அவ்வளவு பெரிய உயரமும் விரிவும் ஆகிருதியும் கொண்ட சூரப்புலி துரை அப்படியே மல்லாந்து விழுந்தது வியப்பாக இருந்தது. ஆலன் எச்சரிக்கை செய்த தொனியும் கேள்விப்படாத காட்சியாகவே இருக்கும். இப்போது அவனுக்கும் இருப்பது நர போதையல்லவா? அது அந்தக் களத்தை நடுக்கியது. சட்டென ஒரு பல்டி போட்டு யாரையும் திடுக்கிட வைத்து எழுந்த துரை வாயைத் திறந்ததும் அண்ணா என்று பாந்தமாக விளித்து ஒரு சமநிலையைக் கொண்டு வந்தான். மன்னிப்பு கேட்டான். போதை அதிகமாகி என்னவோ ஒன்று தவறி விட்டதாக அவன் அதை விளக்க முயன்றான். கட்டிப்புடி, கட்டிப்புடி சம்பிரதாயம் துவங்கி அப்புறம் பிரிந்தார்கள்.

**சா**யந்தரமாகி விட்டிருந்தது.

ஆலனும் டேவிட்டும் சாமியும் லோகாவும் அவர்களுக்குத் தெரிந்த சிலருக்காக கேக்குகள் வாங்கினார்கள். அதைக் கொடுத்துவிட்டு வர



போனார்கள். சிறுநீர் கழிக்க வேண்டி போன பசுபதி அந்த மைதானத்திலிருந்து திரும்பி, கோட்டர்சுக்கு எதிரே இருந்த கடைகளுக்கு அருகே வந்தான். பார்பர் ஷாப்பில் பேப்பர் படித்தான். பக்கத்து கடையில் டீ குடித்தான். பொழுது போக்காக உலகையும் வாக்காளப் பெருங்குடி மக்களையும் வேடிக்கை பார்த்துக்கொண்டு நிற்கும் போது அவனுடைய கழுத்து இறுக்கப்பட்டது. பசுபதி அப்படியே மேலுக்குத் தூக்கப் பட்டான். விழிகள் பிதுங்கி நீர் கக்கியது. துரை தான் அதை செய்து கொண்டிருந்தான். மேலும் அதைத் தொடர முடி யாமல் இறக்கிவிட்டு உடனடியாக எங்கிருந்தோ எடுத்த அந்தக் கத்தியை பசுபதி கழுத்தில் வைத்தான். பசுபதிக்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதே புரியாத அளவில் ஒரு கிறக்கம் கழட்டிக் கொண் டிருந்தது. இருப்பினும் துரை சொல்வது கேட்கிறது. "கோழியை அறுப்பது போல இப்போது உன் கழுத்தை அறுக்கட்டுமா?"

அவனுக்கு ஆலன் ஒரு கில்லாடி தானா என்பது தெரிய வேண்டும்.

அவனை நேரிடுவதில் ஒரு பயம் வந்துவிட்டது. அவன் ஆலனைக் கொல்ல விரும்பு கிறான். அதே நேரம் போதையில் இதை எப்படி கேட்டுத் தெரிந்து கொள்ளுவது என்பதும் புலப்படவில்லை. சரியான ஒரு உணர்வு மிச்சம் இருக்கிறது என்றால் அது அந்தக் கத்தியில் மட்டுமே. அவன் பசுபதியை அறுக்க முயலும்போது தாசும் கடைக்காரர்கள் சில பேரும் சேர்ந்து புரட்டி விட்டார்கள். மேலும் பாய்ந்தவனைத் துரையோடு வந்தவர்களே தடுத்து அவனை அள்ளிச் சென்றார்கள். அவன் மிருகம் போல உறுமிச் செல்லுவது பசுபதிக்கு ஒரு மறக்க முடியாத காட்சி.

பேச முடிகிறதா என்று பரிசோதித்துக் கொண்டான். கொஞ்சம் கரகரத்து குரல் விடுபட்டது.

**பசுபதி வருவதற்குள் அவள் தூங்கிவிட்டாள். அவள் அருகில் படுத்து அவளுடைய கரங்களைப் பற்றிக்கொண்டு அவன் வெகு நேரம் அழுதான், அப்படியே தூங்கியும் போனான்.**

எல்லோரும் வந்ததும் வேறு ஒரு ஷாப்பில் குடித்தார்கள். அத்தனை பேரும் களைத்துப் போயிருந்தார்கள். பூங்கா வனத்தை பாட விடவில்லை.

ரோட்டுக்கு வந்ததும் தான் நடந்த விஷயத்தை அறிந்தார்கள். அந்த துரை தன்னோடு இருந்தவர்களில் ஒருவனை அறுத்துப் போட்டிருக்கிறான். கோழியை அறுப்பதுபோலத்தான் அவன் அதைச் செய்திருக்கிறான். பசுபதிக்கு உள்ளே இருந்த நடுக்கம் வெளியேயும் வந்தது. உடனடியாக தோன்றிய உணர்வில், போனை எடுத்துபேச முற்பட்டான். தேவகி என்று அழைத்தான். போனை எடுத்தது மனைவி அல்ல, லதா; மகள். எட்டாவது வகுப்பு படிக்கிறாள். பாட்டி வீட்டுக்கு போயிருந்தாள். வீட்டுக்கு திரும்பி விட்டாள் போலும்.

"சீக்கிரம் வாப்பா. உன்னப் பாத்துட்டுதான் தூங்கனும்!"

ஆனால், பசுபதி வருவதற்குள் அவள் தூங்கிவிட்டாள். அவள் அருகில் படுத்து அவளுடைய கரங்களைப் பற்றிக்கொண்டு அவன் வெகு நேரம் அழுதான், அப்படியே தூங்கியும் போனான். இருட்டில் அவனைப் பார்த்துக் கிடந்த தேவகிக்கும் கண்ணீர் முட்டியது. அவனுடைய முதுகை அணைத்துக்கொண்டாள். நேற்று நடந்துவிட்ட அந்த முத்த சமாச்சாரம் இனி மேல் நடக்காது என்று தீர்மானித்துக்கொண்டாள். அந்த எண்ணம் வந்தபோதே அழுகை பெருகி வந்தது. 'செல்லமே செல்லமே' என்று அவனோடு ஒண்டிக்கொண்டாள்.

முறைப்படி இங்கே கதை முடிந்திருக்க வேண்டும்.

ஆனால், மறுநாள் லதாவை பள்ளிக்கூடத்தில் விட்டு வரப் போனவன் அப்படியே எங்கேயோ சென்றுவிட்டான். வழக்கப்படி இவள் போனில், "எங்கே இருக்கிறீர்கள்?" என்றதற்கு அவன், "அடச்சீ, போன வை" என்றுதான் சொன்னான். வேலை முடிந்து திரும்பியபோது படுக்கையில் தேவகி அந்த ஆளுடன் இருந்தாள். அப்புறம் என்ன? அவளை அவன் அறுத்துப் போட்டான்.

கோழியை அறுப்பதுபோல. ●

**மணி எம் கே மணி**
<mkmani1964@gmail.com>

# எஸ். ராமகிருஷ்ணனின்
# எனது இந்தியா



பொ.கருணாகரமூர்த்தி

இந்தியாவின் நீண்ட சரித்திரத்தில் எக்கால கட்டங்களின் எவ்வெச் சம்பவங்களை எல்லாம் எஸ்.ராம கிருஷ்ணன் இந்நூலில் தொகுத்துத் தந்திருக்கிறாரோ வென்கிற பெரும் எதிர்பார்ப் போடுதான் நூலைக் கையிலெடுத்தேன்.

தீவிர காந்தியப் பிரியரான எஸ். ராமகிருஷ்ணன் முதல் அத்தியாயங்களிலேயே காந்தி யைப் பற்றியும் அவரது எளிமை யான வாழ்வையும் அவர் சுடப்படுவதற்கான சூழ்நிலை களையும் உணர்வுப்பூர்வமாக விவரிக்கின்றார். எம் நாட்டில் விளைகின்ற உப்பை நாமே ஒரு பாளையத்திலிருந்து இன் னொரு பாளையத்துக்கோ ஒரு ஜில்லாவிலிருந்து மறு ஜில்லாவுக்கோ எடுத்துச் செல்லமுடியாதபடி கிழக்கிந்தியக் கம்பனியார் தடுத்தும் உப்பைச் சுதேசிகள் பயன்படுத்த அனுமதிக் காமலும் / அதை நுகர்வோருக்கு வரியும் விதித்தனர். அவ்வநீதிக்கு எதிராகக் காந்தி எவ்வளவு நுட்பமாகக் காய்களை நகர்த் தினார் என்பதையும் அவரது உப்புச் சத்தியாக்கிரகம், சுதந்திரப் போர் வலுவடையச் செய்ய எத்தனை தொலைநோக்குடன் ஊன்றப்பட்ட வித்து என்பதையும் வாசகன் மனதில் அழுத்திப் பதிய வைத்து வியக்க வைக்கிறார் எஸ். ராம்கிருஷ்ணன்.

துணைக் கண்டத்தில் அமைதியாக இருந்த, இந்தியாவின் பிராந்திய அரசுகளின் சுதந்திரத்தின் / ஆளுமையின் மீது முகலாயப் படையெடுப்பாளர்களின், கிழக்கிந்தியக் கம்பனிகளின் வல்லாதிக்கமும் அதிகாரமும் அபகரிப்புகளும் கொள்ளைகளும் என கபளீகரங்களுக்கு உள்ளானபோது, காலத்துக்குக் காலம் அவர்களுக்கெதிராக சுதேசிகளில் பலர் அணிதிரண்டு சுதந்திர தாகத்துடன் எப்படிப் போராடினார்கள், அடிவருடி களும் ஒட்டுண்ணிகளும் எப்படிப் பணிந்து சுயலாபம் பெற்றனர் என்பதின் வரலாற்றையும் நூலின் ஒவ்வொரு அத்தியாயத்திலும் பதிவு செய்திருக்கிறார் எஸ். ராமகிருஷ்ணன்.

இந்தியா 1947இல் சுதந்திர மடைந்த பின்னால், ஆச்சார்ய வினோபா பாவேயின் பூதான இயக்கமூலம், அவர் 1951இலிருந்து தேசம் முழுவதும் ஓயாத நடைப் பயணங்கள் மேற்கொண்டு,

நிலச்சுவான்தார்களாயிருந்த பணக்காரர்களையும் ஜமீன்தார்களையும் சந்தித்து, அவர்களிடமிருந்த 3,00,000 ஏக்கர் நிலங்களைத் தானமாகப் பெற்று, அவை இலட்சக்கணக்கான விளிம்பு நிலை மக்களிடம் பகிர்ந்தளிக்கப்படவும் அந் நிலங்கள் விளைநிலங்களாக மாற்றப்பட்டுத் தேசத்தின் தானிய / உணவுப் பொருள் உற்பத்தியில் பெருவளர்ச்சியை உண்டு பண்ணியமையையும் அறிகிறோம்.

இந்தியா எங்கணும் தனியார் வனங்களிலும் முடிக்குரிய காடுகளிலுமுள்ள மரங்களை வெட்டிவீழ்த்த, கிழக்கிந்திய கம்பனியாரிடமும் நிலச்சுவான்தார்களிடமும் அனுமதி பெற்றுக்கொண்டு, வன ஒப்பந்தக்காரர்கள் பலரும் மரங்களைக் கண்டபடி வெட்ட ஆரம்பிக்கையில், பெண்கள் பேரெண்ணிக்கையில் பங்கெடுத்து ஆரம்பித்தது 'சிப்கோ இயக்கம்'. அவ் வியக்கத்தின் பெண்கள் எல்லோரும் நூற்றுக்கணக்கில் வனங்களுக்குச்சென்று 'அவற்றைத் தறிக்க விடமாட்டோம்" என்று மரங்களை கட்டிப் பிடித்துக்கொண்டு, மரங்களைத் தறிக்க வந்த ஒப்பந்தக்காரர்களை விரட்டிய நிகழ்வுகள், இந்தியச் சரித்திரத்தில் பதிவாகியுள்ளன. செறிவான எண்ணிக்கையில் மரங்களிருந்த வனங்களின் சொந்தக்காரர்களான நிலச்சுவான்தார்கள் பலரையும் இவ்வன ஒப்பந்தக்காரர்கள் கபடத்தனமாக மதுவையூட்டிப் போதையில் வைத்துவிட்டு, மரங்களை வெட்டிச்செல்ல முயன்ற கபளீகர முயற்சிகள், சுற்றுச்சூழல் இயக்கத்தினரின் அர்ப்பணிப்புடனான போராட்டங்களால் முறியடிக்கப்பட்டன. கிழக்கிந்தியக் கம்பனியார் இந்தியாவின் வளமிக்க இயற்கை வளங்களை அழித்து, பெறுமதி வாய்ந்த மரங்களை கப்பல் கப்பலாகத் தம்நாட்டுக்கு எடுத்துச் சென்றார்கள்; எவ்வளவு தானியங்களை, பருத்தியை எடுத்துச் சென்றார்கள் என்கிற நிகழ்வுகள் தொடரும் அத்தியாயங்களில் விலாவரியாக விவரிக்கப்படுகின்றன.

குளிர்பதனப் பெட்டிகள் கண்டுபிடிக்க முற்பட்ட காலத்தில், பொஸ்டன் ஏரிகளிலிருந்து பனியைப் பாளம் பாளமாக அரிந்து, அவற்றை மரப்பெட்டிகளில் வைக்கோல்களின் இடைபொதித்து அடைத்துக் கப்பல்கள் மூலம் இந்தியாவுக்குக் கொண்டுவந்து செய்யப்பட்ட வியாபாரத்தில், எப்படி கிழக்கிந்தியக் கம்பனியாரும் சேர்ந்துகொண்டு பெருந் தொகையான பண மீட்டினர் போன்ற விவரங்கள் அடுத்த அத்தியாயங்களில் வருகின்றன.

இந்தியாவின் பல பாகங்களிலும் கிழக்கிந்தியக் கம்பனி அரசின் தரகு முகவர்களாக இருந்த வைஸ்ராய்களினதும் நவாபுகளினதும் அதிகாரிகளினதும் நிர்வாக முறைகேடுகள் பற்றியும் அவர்களின் சீரழிவான ஆட்சிமுறைக்குத் துணைபோன குறுநில மன்னர்கள், நவாபுகள், சிற்றரசர்கள், திவான்கள் பற்றியும் ஏராளம் தகவல்களை அள்ளித் தந்திருக்கிறார்.

கிழக்கிந்தியக் கம்பனியினரில் வேட்டைப்பிரியர்களாயிருந்தசில கவர்னர்களுட்பட்ட வெள்ளையர்கள், தமது பொழுதுபோக்கு விளையாட்டுக்காக இந்தியாவின் யானைகளையும் காண்டாமிருகங்களையும் புலிகளையும் அரியவகைச் சிறுத்தைகளையும் மான், மரை, காட்டு எருமைகளையும் ஆயிரக்கணக்கில் சுட்டொழித்த வேட்டைத் துர்வினைகளை நினைவுபடுத்தும் அரிய புகைப் படங்கள் பலவும் இந்நூலில் இடம்பெறுகின்றன.

வெள்ளைக்காரர்கள் என்றால் அவர்களின் கைகள் சுத்தமாகவே இருக்கும் என்பதே பொதுப்புத்தியில் அவர்கள் பற்றிய பிரமையும் மதிப்பீடுமாகும். ஆனால், உண்மை அவ்வாறு இல்லை. இந்தியாவின் அரசியலிலும் நிர்வாக இயந்திரத்திலும் பொதுத்துறையிலும்இருக்கும் ஊழல்களுக்கெல்லாம் முன்னோடிகள் வெள்ளையர்கள்தான். ஒரு சாதாரண எழுத்தராக ஆண்டுக்கு 5 பவுண்ட்ஸ் சம்பளத்தில் இந்தியாவில் காலடி எடுத்துவைக்கும் ராபர்ட் கிளைவ் என்கிற ஆங்கிலேயன் வேண்டியவர்களுக்கெல்லாம் கையூட்டுக்கொடுத்துக்கொடுத்து, கிழக்கிந்தியக் கம்பனியின் பெரிய பெரிய பதவிகளையெல்லாம் பெற்றுக்கொண்டுவிடுகிறான். அப்படியே இங்கிலாந்துப் பாராளுமன்றத்தில் உறுப்பினரும் ஆகிவிடும் அவன் இந்தியர்களின் பணத்தையெல்லாம் உறிஞ்சி நாடு திரும்பும்போது, அவனது சொத்தின் மதிப்பீடு அக்காலத்தைய 34,000 பவுண்டுகளாம்.

எலிஹு யேல் (Elihu Yale) என்பவர், அமெரிக்காவின் பொஸ்டன் நகரில் வாழ்ந்த இங்கிலாந்தைச் சேர்ந்த தம்பதிக்கு 1649இல் மகனாகப் பிறந்தார். இளமைக் காலத்தில் கல்வி கற்பதற்காக இங்கிலாந்து சென்ற யேல், அங்கிருந்து கிழக்கிந்தியக் கம்பனி ஒன்றில் எழுத்தராகப் பணியாற்றுவதற்காக இந்தியாவுக்கு வந்தார். கம்பனியின் பல பொறுப்பு களையும் வகித்த யேல், வெகு விரைவிலேயே மதராஸின் இரண்டாவது கவர்னராகப் பதவி வகித்தார். இக்காலகட்டத்தில் தன் சொந்த வருமானத்தை அதிகரிக்கச் செய்யப் பல சுரண்டல் உத்திகளைக் கையாண்டார். கிழகிந்தியக் கம்பனிக்காகப் பணியாற்றி, திருட்டுத்தனமாக இந்தியாவைச் சுரண்டிச் சுரண்டிப் பெருஞ்செல்வமாக திரட்டியெடுத்து, அதைக்




கொண்டுபோய் அமெரிக்காவில் யேல் பல்கலைக்கழகத்தை ஆரம்பிப்பதற்கு பெருநிதியுதவி செய்தார். 1692இல் பல இலஞ்ச ஊழல் குற்றச்சாட்டுக்கு ஆளாகிப் பதவியிழந்த ஒருவரின் பெயரையே இன்னமும் 'எலிஹு யேல் பல்கலைக்கழகம்' தாங்கி நிற்பதுபுவியின் அவமானகரமான நிகழ்வுகளில் ஒன்றாகும்.

பாரத பூமியின் நீள, அகல, உயரங்களை அளந்து அதன் சில வரைபடத்தை வரைந்த சர்வேயர் ஜெனரல் ஆண்ட்ரூ ஸ்காட் வா, கர்னல் வில்லியம் லாம்ப்டன் போன்ற நில அளவையாளர்களும்; இந்தியாவின் குளங்களையும் வாய்க்கால்களையும் தூரெடுத்து, புதிய குளங்களையும் அணை களையும் கட்டி நீர்ப்பாசனத்தைப் பெருக்கி விவசாயிகளுக்கு பெரு வாழ்வளித்த ஆர்தர் கொட்டன் போன்ற பொறியாளர்களும்; காலராக் காலத்தில் மக்களின் துயரத்தைத் துணிச்சலுடன் நேரில் பார்வையிடச்சென்று கடைசியில் தானும் காலராவுக்கே பலியான தோமஸ் மன்றோ போன்ற மாமனிதர்களும் இம்மண்ணில் வாழ்ந்திருப்பதையும் எஸ். ராமகிருஷ்ணன் இந்நூலில் துலக்கிக் காட்டுகிறார்.

விஜயநகரப் பேரரசின் போது அவர்கள் கிராமத்தின் எல்லைகளைக் குறிக்க, திரிசூலம் அடையாளம் பொறிக்கப்பட்ட எல்லைக் கற்களை நட்டுவைக்க, அதையே மக்கள் வழிபடத் தொடங்கியதும் அவர்கள் தம் சிறு தெய்வங்களாக ஆக்கிக் கொண்டதும் சுவாரசியமான வரலாறு.

பிரிட்டிஷ் ஆட்சியாளருடன் நெருக்கமாகப் பழகி அவர்களிடம் நட்பை ஏற்படுத்திக்கொண்டு, 1903ஆம் ஆண்டு ராஜஸ்தானின் அல்வாரை தனி அரசாக்கி, அதற்கு அரசராக முடிசூட்டப்பட்ட ஜெய்சிங்கின் பழக்கவழக்கங்கள் விநோத மானவை. இன்னொரு நாட்டின் மீதான படையெடுப்புப்போல 300 குதிரைகள், 50 யானை களைச் சேர்த்துக் கொண்டு வேட்டைக்குச் சென்று நூற்றுக் கணக்கில் கானுயிர்களைக் கொன்று குவிக்கும் அவன் மிகுந்த ஆடம்பரப் பிரியன்; முன்கோபி. தனக்குக் கோபம் வந்தால் தன் செவிலிப் பெண்ணைத் தூக்கிப் புலிக்கு உணவாகப் போட்டுவிட்டு அவள் உண்ணப்படுவதைப் பார்த்து ரசிப்பானாம். விருந்துக்கென்று திவான்களையும் ஜமீன்தார் களையும் அரசவைப் பிரதானி களையும் பிரமுகர்களையும் அழைத்துவிட்டு எதுவும் கொடுக்காமல் அவர்களை விருந்து மண்டபத்தில் வைத்துச் சவுக்கால் அடித்து விரட்டவும் செய்வானாம்.

இறந்துபோன காதல் மனைவியின் நினைவாக உலகப்புகழ்பெற்ற தாஜ்மகாலைக் கட்டிய ஷாஜகான் வாழ்வின் இறுதிக் காலம்வரை அவரது மகன் ஔரங்கஜிப்பினால் வீட்டுக் காவலில் வைக்கப்

படுகிறார். ஆனால், ஷாஜகானின் அன்புமகள் ஜஹானாரா அவருக்குச் செவிலியாகப் பணிவிடை செய்ய அனுமதிக்கப்படுகிறாள். ஔரங்கஜிப்பினால் வயோதிபம் காரணமாக விரட்டியடிக்கப்பட்ட அவரது மற்றைய மனைவிகளையும் ஜஹானாராவே அவர்களின் அந்திமகாலத்தில் வைத்துப் பராமரிக்கின்றாள். ஷாஜகானின் மறைவுக்குப்பிறகு ஜஹானாராவும் தனியாக ஒரு அரண்மனையைக் கட்டிக்கொண்டு இல்லற பந்தமெதிலும் இணையாமலே தனிக்கட்டையாக வாழ்ந்து மறைகின்றாள்.

நான் இதுவரை காலமும் நாசிகள்தான், கனமும் கூர்மையுமையுமான உருக்கு அலகொன்றைத் தரைநோக்கி விழவைத்து மனிதனின் தலையைக்கொய்யும் கிலெட்டின் எனும் கொலைக் கருவியைத் தயாரித்தார்களென நினைத்துக் கொண்டிருந்தேன். அது அப்படியல்ல பிரான்ஸின் கொடுங்கோல் மன்னனாகிய 16ஆம் லூயிதான் அதைத் தயாரித்து, பின்னர் வந்த கிளர்ச்சியின் பயனாக அவனே அக்கருவியினால் கொல்லப் படுகிறான் என்கிற தகவலையும் இந்நூலிலிருந்து அறியமுடிகிறது.

இந்திய மண்ணில் பிரிடிஷார் விளைவித்த கஞ்சா, அபின், போன்றமோஃபீன் கலந்த லாகிரிப் பண்டங்களை சீனத்தினுள் கொண்டுசென்று வியாபாரம் செய்யவொண்ணாது சீனம் தடை பண்ணியதின் எதிர்விளைவாகத்தான் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய அரசாங்கம் சீனாவுடன் போர் தொடுத்ததென்பதுவும் அதன் காரணமாகவே ஹொங்கொங்கை வெற்றிகொண்டது என்பது போன்ற ஆச்சரியமான தகவல்கள் இந்நூல் முழுவதும் விரவியுள்ளன.

இந்தியாவின் விளை தானியங்கள் அனைத்தையும் காலத்துக்குக் காலம் இங்கிலாந்துக்கே கப்பலேற்றிவிடும் பிரிடிஷாரின் அட்டூழியங்களால் இங்கு ஏற்பட்ட பஞ்சமும் பட்டினிச் சாவுகளும் எண்ணிலடங்காதவை. போதாதுக்கு அவ்வப்போது காலரா / கொள்ளை நோய்வந்து ஊரோடு அனைவரையும் பஸ்மீகரணம் பண்ணி, அவர்களுக்கு வைத்திய உதவிகள் செய்யப் போவோரையும் நோயில் வீழ்த்தி, அழித்துவிட்ட அவலங்கள் விவரிக்கப்படுகின்றன.

தொடரிகள், பாரவுந்துகள் இல்லாதவொரு காலத்தில் வட இந்தியாவின் கிழக்குப் பகுதியில் வாழ்ந்த 'பஞ்சார' அல்லது தென் வழக்கில் 'லம்பாடிகள்" என வழங்கப்பட்ட அலைந்து திரியும் மக்கள்கூட்டம், எப்படி பொதி மாடுகளில் அரிசி, உப்பு, தானியம் போன்றவற்றை ஏற்றிக்கொண்டு தேசம் முழுவதும் கொண்டுதிரிந்து வணிகம் செய்தனர், எப்படி நாடோடிகளாக வாழ்ந்தனர் என்பது போன்ற விடயங்களின் விவரிப்புகளைப் படிக்கும்போது எஸ். ராமகிருஷ்ணனினது புனைகதைகளை படிப்பது போன்ற சுவாரசியம் உண்டாகின்றது. இதைப்போல் வஸ்கொட காமாவின் இந்தியாவை நோக்கிய கடற்பயணமென ஏராளம் தகவல்கள் இந்நூலில் காணலாம்.

'இமயம் எனும் அரண்' என்கிற 65ஆம் அத்தியாயத்தில் இந்தியாவின் வளமைக்குக் காரணமான சிந்து, கங்கை, பிரமபுத்திரா, ஐராவதி, யாங்சி போன்ற ஆறுகள் இமயமலையில்தான் உற்பத்தியாகின்றன ஆப்கனிஸ்தான், பாகிஸ்தான், இந்தியா, சீனம், பூட்டான், நேபாளம் போன்ற நாடுகளை இணைக்கும்படி இமயமலை இணைந்துள்ளது போன்ற விவரங்கள் தரப்பட்டுள்ளன

பிரமபுத்திரா தீபெத்தைச் சேர்ந்த இம்மலைப் பகுதியில் ஜனித்தாலும் இந்தியாவுக்குள் அருணாசலம், அஸ்ஸாம் வழியாக ஓடி வங்கதேசத்துள் சென்றே கடலில் கலக்கிறது. மேற்படி விவரங்கள் தரப்பட்டுள்ள பக்கங்களில் வாசகன் பிரதேசங்களையும் மாநிலங்களின் அமைவிடங்களையும் ஆற்றின் வழித்தடங்களையும் இலகுவாகப் புரியும்படியாக சில வரைபடங்களையும் அப் பக்கங்களில் இணைத்திருந்தால் சிறப்பாக இருந்திருக்கும்.

கணித ஆர்வலரும் புவியியலாய்வாளருமான வில்லியம் லாம்டன் உடன் ஜோர்ஜ் எவெரெஸ்ட் எனும் நில அளவையாளரும் சேர்ந்து இந்தியாவின் வரைபடத்தை அமைக்கப் பாடுபட்டனர், மத்திய இந்தியாவின் வரைபடம் தயாரானதும் வில்லியம் லாம்டன் காலகதியடைந்துவிடுகிறார். சர்வே ஜெனரலாகப் பதவி உயர்ந்த ஜோர்ஜ் எவெரெஸ்ட், தியோடலைட்டு (Theodolite) போன்ற நவீன கருவிகளைப் பயன்படுத்தி இமயமலையின் மலைப் பகுதிகளை அளவிடத் தொடங்கினார். அவருடன் சேர்ந்து பணியாற்றிய ராதாநாத் சிக்தார் எனும் இளைஞன், இமாலயத்தின் 15 மலைமுடிகளில் ஒன்றாகியதும் அங்கே நேபாளிகளால் அவர்களின் குலதெய்வம் வாழ்வதாக நம்பப் பட்ட 'கோமோலுங்குமா' எனும் மலையுச்சியை 1852ஆம் ஆண்டு கண்டுபிடித்தான். நில அளவையியலில் நவீன கருவிகளால் புதுமையாக அளவீடுகளைத் துல்லியமாகச் செய்த தனது சர்வே ஜெனரலின் ஞாபகர்த்தமாக, 'கோமோலுங்குமா' மலையுச்சிக்கு அவனே 'எவரெஸ்ட்' என்ற பெயரையும் சூட்டினான்.

இவ்வாறு இமாலயத்தின் 15 முடிகளில் ஒன்றாகிய எவரெஸ்ட்டுக்கு அந்தப் பெயரைத் தந்த நில அளவையாளர் பற்றியும் எதற்காக அப்பெயரைத் தேர்ந்தெடுத்தார்







போன்ற விவரங்களையும் அத்தியாயம் 5இல் தனியாகவும் சுவாரசியமாகவும் தரும் எஸ். ராமகிருஷ்ணன், அவ்விவரணங்களை இமாலய மலையைப் பற்றி விவரிக்கப்பட்ட 65ஆவது அத்தியாயத்திலேயே சேர்த்துத் தராமல், எதற்காகச் சிறு ஒரு அத்தியாயத்தை தனியாக எழுதி, அதை ஏன் நூலின் ஆரம்பத்தில் வைத்தார் என்பது தெரியவில்லை.

இந்தியாவைப்பகுதிபகுதியாக ஆண்ட முகலாய மன்னர்களில் ஔரங்கஜிப், முகமது பின் துக்ளக், அலாவுதீன் கில்ஜி, மாலிக்கபூர் இவர்களைப் பற்றியெல்லாம் விவரமாகக் குறிப்பிடும் எஸ். ராமகிருஷ்ணன், அவர்களின் பரம்பரை / பிறப்பு பற்றியெல்லாம் சொல்லியிருக்கிறார். ஆனால், இந்தியாவினுட் பிரவேசித்த முதலாவது மொகலாய மன்னரும் கடந்த நூற்றாண்டில்கூட இத்தனை சர்ச்சைக்குப் பட்டிருக்கும் பாபர் மசூதியைக் கட்டியிருந்தவருமாகிய பாபரைப் பற்றிய விவரிப்புகளை மிகக்குறைவாகவே தந்துள்ளார். அவருடைய முந்தோன்றல்கள் யார், அவர் எங்கிருந்து வந்தவர் (உஸ்பெஸ்கிஸ்தானிலிருந்து) என்பதுபோன்ற தகவல்களையே காணோம்.

இந்தியாவுக்கு மதப்பிரச்சாரத்துக்கே வந்திருந்தாலும் ஜெர்மன் ஹல்லே பல்கலையில் இயற்பியல் பயின்றவரும் இறையியலாளருமான சீகன்பால்க் (Ziegenbalg), புதுச்சேரியில் காணப்பட்ட சாதிய முறையிலான சமுதாய முறைக்கு எதிராகக் குரல்கொடுத்தது ஆச்சரியமான தகவல். அவர் லிஸ்பனில் தனது முதலாவது விவிலியத்தை 'தம்பிரான் வணக்கம்' எனும் தலைப்பில் தமிழில் அச்சிட்டு வெளியிட்டார். அவரது பெயர் தவறுதலான இடத்தில் பிரிக்கப்பட்டு, சீகன் - பால்கென குறிப்பிடப்பட்டுள்ளமை தவறாகும். சீகன்பால்க் எனத் தரப்பட்டிருக்க வேண்டும்.

சுதந்திரப் போராட்டத்துடன் சம்பந்தப்பட்ட காங்கிரஸ் இயக்கங்கள்; பிகாரி போஸ், சுபாஸ் சந்திரபோஸ் இவர்களின் இந்தியத் தேசிய இராணுவத்தின் போராட்ட முன்னெடுப்புக்கள் (1942) போன்றவற்றை எல்லாம் முன்னுக்குத் தந்துவிட்டு, காலத்தால் இவற்றுக்கும் முற்பட்ட சிப்பாய் எழுச்சி (1806), சந்தால் எழுச்சி, பிர்சா முண்டாவின் போராட்டங்கள், அவை ஆரம்பிப்பதற்கான சமூகச் சூழல்கள் போன்றவை பின்னால் விவரிக்கப்பட்டுள்ளன.

அமிர்தசரஸில் ஜாலியன் வாலாபாக் மைதானத்தில், தனது தடை உத்தரவையும் மீறிக்கூட்டம் நடத்திய 1000 - 2000 வரையிலான மக்களை இரத்தக் காட்டேறி ஜெனரல் டயர் தனது படைகளை அனுப்பி சுட்டு வீழ்த்திய கொடூரச் சம்பவம் 1919இல் நடைபெறுகிறது. இதனைத் தனியாக அத்தியாயம் 37இல் விவரிக்கும் எஸ். ராமகிருஷ்ணன் (பக்கம் 208), எட்டு ஆண்டுகள் முன்னால் ஆஷ் எனும் கொடுங்கோலனை வாஞ்சிநாதன் எனும் சுதந்திரப் போராட்ட வீரன் சுட்டுக்கொன்று, 1911இல் உலகையேஇந்தியாவைத்திரும்பிப் பார்க்க வைத்த சம்பவத்தை அத்தியாயம் 57இல் விவரிக்கிறார்.

சரித்திரத்திற்குட்பட்ட காலத்து மன்னர்களில் அசோகரே மூத்தவர், கி.மு. 273 காலத்தவர்; கஜனி, பாபர், மாலிக்கபூர் போன்ற ஆக்கிரமிப்பாளர்கள் காலத்தால் அக்பருக்கும் பிந்தியவர்கள். ஆனால், எஸ். ராமகிருஷ்ணனுக்குக் கொஞ்சம் விளையாடத் தோன்றியதோ என்னவோ 1799இல் போரிலிருந்த திப்பு சுல்தான், 1799இல் கழுவேற்றப்பட்ட கட்டப்பொம்மு, 1801இல் தூக்கிலிடப்பட்ட மருது பாண்டியர்கள் இவர்களின் சரித்திரங்களை அத்தியாயம்

11இல் தந்துள்ளார். சரித்திரத்தில் இவர்களுக்கு முந்தியவரான ஷாஜகானின் அரசு 1628 முதல் 1658 வரையில் இருந்த தாகச் சரித்திரக் குறிப்புகள் சொல்கின்றன. அத்தியாயம் 21இல், தந்தை ஷாஜகானை சிறை யிலிட்டுவிட்டு தனக்குத்தானே 1658இல் முடிசூட்டிக்கொள்ளும் ஔரங்கஜிப் 1707இல் இறக்கிறார்; அவருடைய மகள் ஜெப் உன் நிசா, ஷாஜகானின் மகள் ஜஹானாரா பற்றிய சரித்திரங்கள் அத்தியாயம் 22இல் இடம்பெற்றுள்ளன. அத்தியாயம் 17-18இல் அசோகனைப் பற்றிக் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

அசோகர், கஜினி முகமது நீங்கலாக மேற்சொன்ன முகலாய மன்னர்கள் எல்லோருக்கும் காலத்தால் முன்னவராகிய பாபரின் (1526) வருகை பற்றி அத்தியாயம் 35இலும்; அதற்கும் முந்தைய அலாவுதீன் கல்ஜியின் படையெடுப்புகள், மாலிக்கபூர் (1296 - 1316) இந்துக் கோவில்கள் மேல் மேற்கொண்ட கொள்ளைகள் பற்றிய நிகழ்வுகள் அத்தியாயம் 44இலும் கூறப்படுகின்றன.

சரித்திர நிகழ்வுகளின் கால நிரல்களுக்கும் இந் நூலின் அத்தியாயங்களுக்கும் சம்பந்தமில்லை. முகலாய மன்னர்களின் ஆட்சிகளைப் பற்றிக் கூறும் அத்தியாயங் களிடையே, பிரிட்டிஷ் அரசால் சுதேசிகளால் உப்பு கடத்தப்படாமல் இருக்க தேசத்துக்குக் குறுக்காகப் போட்ட உப்புத் தடை வேலியைப் பற்றிய தகவல்களை எஸ். ராமகிருஷ்ணன் எழுந்த மானத்தில் காலநிலை பற்றிய பிரக்ஞையின்றியும் தொடர்பற்ற அத்தியாயங்களிடையே கோர்த்துவிட்டுள்ளார்.

எஸ்.ஏ. பெருமாள், தேவதச்சன் போன்ற ஆளுமைகளின் வழிகாட்டுதல்கள் இருந்ததாகவும், ஐ.ஏ.எஸ். பரீட்சைகளுக்காக மாணவர்கள் இந்நூலைப் படிப்பதாகவும் குறிப்பிடும் எஸ். ராமகிருஷ்ணன், காலநிலையில் குழப்பங்கள் ஏற்படாத வகையில் அத்தியாயங்களை இன்னும் செம்மையாக வகுத்திருக்கலாம். இவை எல்லாவற்றையும் நிவர்த்தி செய்யும் விதமாகக் குறைந்தது மொகலாய மன்னர்களின் ஆட்சிக்காலத்தின் நிரலையாவது நூலின் இறுதிப் பகுதியில் நிரற்படுத்தியிருக்கலாம்.

ஒவ்வொரு அத்தியாயங் களின் இறுதியிலும் சரித்திர நிகழ்வுகளுக்கான உசாத் துணை நூல்களின் நிரல் தரப்பட்டிருப்பதைப் போன்று நூலில் முற்பகுதியிலேயே அத்தியாயங்களின் தலைப்புகள் அட்டவணை நிரலாகத் தரப்பட்டிருப்பின் வாசகரின் தகவல் தேட்டத்துக்கு இன்னும் இலகுவாக இருந்திருக்கும்.

ராபர்ட் கிளைவ் பற்றிக் குறிப்பிடும்போது, அவன் இந்தியாவைச் சுரண்டிக் கொள்ளையடித்ததுக்கான விலையைத் தந்ததுபோல அவனுக்கான சாவை அவனே தேடிக்கொண்டான் என்று எஸ். ராமகிருஷ்ணன் எழுதியுள்ளார். இதுபோல் பக்கம் 208இல், ஜாலியன் வாலாபாக்கில் ஜெனெரல் டயரின் உத்தரவின் பேரின் அவனின் படைகளால் கைகால்கள் முறிக்கப்பட்ட சிறுவர்களின் சாபங்கள் போல அந்திமகாலத்தில் ஜெனெரல் டயரில் கைகால்கள் பாரிச வாதத்தினால் முடக்கப்பட்டு விளங்காமல் போயின என்றும் எழுதுகிறார். இது முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பது போன்ற ஒரு நம்பிக்கையையோ / கர்மாவையோ வழிமொழிவதைப் போலுள்ளது. ஒரு சரித்திரா சிரியன் தன் நம்பிக்கைகளை நூலினுள் வைப்பது எனக்குச் சரியாகத் தோன்றவில்லை.

சிற்றரசர்கள், நவாபுகள் பிரிட்டிஷ் அரசுக்குச் செலுத்தியது திறை; அது திரை, திரையெனச் சிலவிடங்களில் தவறுதலாகக் குறிப் பிடப்பட்டுள்ளது. மற்றும்படி பொருட்படுத்தக்கூடிய எழுத்துப் பிழைகளோ, தட்டல் வழுக்களோ இல்லாதிருப்பது நூலின் இன்னொரு சிறப்பம்சம்.

எழுவாயோ செயப்படு பொருளையோ பன்மையாகக் கொண்ட வாக்கியங்கள் அனைத்தும் வினைமுற்றுக்களை ஒருமையிலேயே முடிப்பது எஸ். ராமகிருஷ்ணன் பாணி; இங்கும் அதையே தொடர்ந்துள்ளார். 'ஒப்பு நோக்குபவன்' எனும் அற்புதமான கதையை எழுதிய எஸ். ராமகிருஷ்ணனுக்கு, தன் படைப்புகளை இன்னொரு வரைக் கொண்டு 'செம்மை நோக்கு'விப்பதில் என்ன மனத்தடையென்று புரியவில்லை.

இதைவிட அழுத்தமான தாளில் நூலைப் பதித்திருந்தால், நூலில் இடம்பெறும் படங்கள் இன்னும் துலக்கமாகவும் தெளிவாகவும் இருந்திருக்கும்.

மேலே குறிப்பிட்ட சில குறைகள் இருந்தாலும் இது முக்கியமான நூல். இவ்வளவு கனதியான விஷயங்களை உள்ளடக்கிய நூலைப் படைத்த எஸ். ராமகிருஷ்ணனுக்கு வாழ்த்தும் பாராட்டும். ●


பொ. கருணாகரமூர்த்தி
karunah08@yahoo.com


---

எனது இந்தியா - எஸ். ராமகிருஷ்ணன்; பக்கங்கள் 550, விலை: 650.00; வெளியீடு: தேசாந்திரி பதிப்பகம், டி-1 கங்கை அபார்ட்மெண்ட், 110 எண்பது அடி சாலை, சத்யா தோட்டம், சாலிகிராமம், சென்னை - 600 093; மின்னஞ்சல்: desanthiripathippagam@gmail.com, தொலைபேசி: +91 96000 34659

# சுகிர்தராணி கவிதைகள்



**ஓவியம்:**
**காஞ்சன் சந்தர்**

## விதை தேடும் நிலம்

பூத்துதிராத என் முகையிதழே
நீர்க்காணாப் பாறையின் சிறுவெடிப்பில்
சுருண்டிருக்கும் வேராய்
பருவங்கள் பல காத்திருந்து
பாலையின் தோண்டப்படாத பேரூற்றெனக்
கண்டடைந்திருக்கிறேன் உன்னை
மெல்லிய இழையொன்று
என்னிலிருந்து தொடங்கி உன்னை அடைய
சிறிது சிறிதாக
என்நிலம் பூத்துக் களிக்கிறது
உன் வெதுவெதுப்பான மழையில்
நானும் வயலில் திரியும் என் குருவிகளும்
நனைந்து உலர்கிறோம்
எனதன்பே
என்னிதயம் உன் நினைவின் பின்னலால்
ஆனதென்பதை நீ நம்புகிறாயா
உன்மீதான ப்ரியத்தை



எப்படித் தொடங்கி எப்படி முடிப்பது
சொல்லவும் வார்த்தைக் கூடாதிருக்கிறேன்
மழையை மழையென்றும் மழையை நீரென்றும்
உணர்வது உன் விருப்பம் ஆயினும்
நான் உன்னை விரும்புகிறேன்
உன்னிதயத்தை உன் கண்களை
உன் விரல்களின் ஸ்பரிசத்தை
உன் மெல்லிய அணைப்பை
உன் உதடுகள் தராத முத்தங்களை
அத்தனையையும் விரும்புகிறேன்
சித்திரத்தின் மீது மையூற்றி நிற்கும்
சிறு குழந்தையாய்க் கேட்கிறேன்
விதைகளை நிலத்தில் மட்டுமே வீசு.

## மரணம் ஒரு கலையன்று

குமட்டிக்கொண்டு வரும் வாந்தியைப் போலல்லாது
இந்த இரவு மிகவும் அமைதியாக இருக்கிறது
வானின் நட்சத்திரங்கள்
ஒன்றிரண்டு எரிந்து விழுகின்றன
நீலநீலமாய் மலரும் ஆர்கிட் செடிகளை
நான்தான் பயிரிட்டு வந்திருக்கிறேன்
அந்தக் கல்லறையிலிருந்துதான்
அப்பாவின் குரல் கேட்கிறது
நீ தானாய் இறந்துவிடாதே
மலைகளின் பள்ளத்தாக்குகளில்
காற்று எதிரொலிப்பதைப் போல சிரிக்கிறேன்
அவர் என்னையும் பைத்தியமாக்குகிறார்
யாரால் முடியும்
அகன்ற தெருக்களில் கைவீசி நடமாடும்போது
கருக்குள்ள பட்டயத்தால் தலை வெட்டுப்பட
யாரால் முடியும்
கந்தகத்தை உண்டுசெரித்த காற்றை
எப்போதும் சுவாசித்து சாம்பலாகிவிட
யாரால் முடியும்
வாழ்வின்மீதான நம்பிக்கைகளை
சிந்திக்கொண்டிருக்கும் வனத்தை
வனமின்றிக் கடக்க
யாரால் முடியும்

வெளியெங்கும் இராவிலும் பகலிலும்
இரத்தத்தில் தோய்ந்த உடலும் உயிருமாய்ப்
புணர்ந்து வீசப்பட
இல்லை வேண்டவே வேண்டாம்
மரணம் ஒரு கலையாக மாற வேண்டாம்
என்னை மன்னித்து விடுங்கள் அப்பா
நான் வயது முதிர்ந்தே இறந்து கொள்கிறேன்.

## மேற்கில் மறையும் வெயில்

வாலில் நீலம் பூசிய குருவியொன்று
உள்ளங்கைப் பள்ளத்து மழைநீரில்
உடலின் சிறகுகளை
மெல்ல நனைப்பதைப்போல
தானியம் விதைக்கப்பட்ட வயலில்
அவள் அமர்ந்திருக்கிறாள்
வெகுகாலமாய் வறண்டிருக்கும் சுனையில்
ஊற்றெடுக்கும் பசுமையென
முளைத்திருக்கின்றன பயிர்கள்
அவற்றை நீவிநீவி
ஊடாடிக் கொண்டிருக்கும் களைகளை
மெல்ல பறித்தெறிகிறாள்
அவற்றை பறித்தபடி
முன்னேறிச் செல்லும்
அவள் தலையில் இறங்குகிறது மேற்கில் மறையும் வெயில்.

## விடுபடுதல்

ஒவ்வொரு நாளும் உறக்கம் களைந்தெழும்
என் கண்களுக்குக் காணக் கிடைக்கின்றன
தேநீர்க் கறை படிந்த காலிக்கோப்பை
சங்கிலியால் பிணைக்கப்பட்ட கலப்பின நாய்
நீரூற்ற மறந்த ஒரு செடியின் கூம்பிய மொட்டு
பின்புறம் அசைய உடற்பயிற்சி செய்யும் உன் முதுகு

மீண்டும் கண்களை மூடி
காண விரும்புவதெல்லாம்
முத்தத்தின் ஆவிபறக்கும் இளஞ்சூட்டுத் தேநீர்க் கோப்பையை
மழையில் நனைந்து உறுத்தாத நிறத்தில் பூத்திருக்கும் பூவை
ஒற்றைக் காலை உயர்த்தி சிறுநீர் பெய்யும் நாயை
முகத்தோடு முகம் இருத்தி
கன்னத்தை வெதுவெதுப்பாக்கும் உன் மெல்லிய அன்பை

மேலதிகமாக
இந்தக் கவிதையிலிருந்து
உனக்கான விடுதலையை.

## நெருப்பின் பழம்

ஓடு நீக்கிய ஒற்றைப் புளியம்பழமென
சிவப்பின் பிசுபிசுப்போடு
மெல்ல கீழிறங்குகிறது சூரியன்
குறுக்கும் நெடுக்குமாய்ப் பறக்கின்றன
வலுவிழந்த பறவைகள்
மரம் தன் பூத்தலுக்குத் தயாராகிறது
கம்பிகள் மறிக்கப்பட்ட சாளரத்திலிருந்து
நான் பார்க்கிறேன்
புளிப்பேறிய கள் உண்டவனின்
பாதி திறந்த கண்களைப்போல
கடல்மேல் கிடக்கிறது சூரியன்
அந்தி எத்தனை இரகசியங்களை
வைத்திருக்கிறது
ஒருநொடியில்
மாயக்காரி உடை மாற்றுவதைப்போல
தன் இரகசியங்களை
உரித்து உரித்துப் போடுகிறது
கடலின் அறைக்குள் சூரியன் சென்றிருந்தது
நெருப்புப் பழமெனத் தகித்திருக்கும்
தன் உதடுகளால் யாரை முத்தமிட்டிருக்கும்
தன் செங்காந்தள் உடலை
யாருக்கு ஈந்திருக்கும்
கடல் பொங்குகிறது
கடல் நுரைக்கிறது
கடல் மரிக்கிறது
மிக நீண்ட அமைதிக்குப் பின்
கிழக்கின் அந்தரங்க அறையிலிருந்து
நிர்வாணமாய் வெளிப்படுகிறது சூரியன்
நான் சாளரம் மாறிக் கொள்கிறேன்.



## சாதியற்றவனின் மரணம்

நீங்கள் யாவற்றையும் எழுதுங்கள்

ஒருரயில் நிலையத்தில் அமர்ந்துகொண்டு
அதன் நடைபாதையில்
கொட்டிக்கிடக்கும் மஞ்சள் பூக்களை

தூரத்தில்
தாய்ப்பால் புகட்டியபடி
வேர்க்கடலையைப் படிநிறைய
அளந்து விற்கும் பெண்ணொருத்தியின்
தாய்மை பூத்திருக்கும் முகத்தை

சிதிலமடைந்த கற்கோவிலின்
படியிலமர்ந்து உங்கள் முகத்தை நீங்களே ஏந்தி
தொல்பொருளாய்க் காத்திருக்கும்
அந்த ஏகாந்தத்தை

நீங்கள் யாவற்றையும் எழுதுங்கள்\

உங்கள் பண்ணை நிலம் ஊடாக
நடக்கும்போது
நடவு நடும் பெண்ணின்
ரவிக்கைக் கிழிசலை மறைக்க
நீங்கள் வீசி எறிந்த
துண்டின் பெருமையை

வீட்டு முற்றத்தில்
காலைநேர தேநீரை
நீங்கள் அருந்தும்போது
தேநீர்க் கோப்பையின் நிழலில்
இளைப்பாறும் சிட்டுக்குருவியை

நீங்கள் யாவற்றையும் எழுதுங்கள்

இராக்கால மொட்டைமாடி பொழுதுகளில்
எரிந்துவிழும் நட்சத்திரங்களுக்கிடையே
குளிர்ந்துவீசும் தென்றலை

உங்களுக்கான மர அலமாரியில்
ஒளித்துவைத்திருக்கும்
உங்கள் காதலியுடையதோ காதலனுடையதோ
பழந்துணியின் வாசத்தை

நீங்கள் யாவற்றையும் எழுதுங்கள்

ஆனால் ஒருபொழுதும்
எழுதிவிடாதீர்கள்

அரிவாளால் வெட்டுண்டு
ஈ மொய்த்தபடி
வாய்பிளந்து கிடக்கும்
ஒரு சாதியற்றவனின் மரணத்தை ●

**சுகிர்தராணி**<sukiertharani@yahoo.co.in>

# விக்ரமாதித்யன்

# ஆதி எலும்பு பிறப்பித்த கவிஞன்



ஷங்கர்ராமசுப்ரமணியன்

தமிழின் முன்னோடி புதுக்கவிஞர்களுக்கும் மொத்தத் தொகுப்பு வராமல் இருந்த தொண்ணூறுகளின் ஆரம்பத்தில், சிறிய தனித் தொகுப்புகளாகத்தான் புதுக்கவிதைகளை, புதுக்கவிஞர் களை நான் அறிமுகம் செய்யத் தொடங்கியிருந்தேன். சுந்தர ராமசாமி, பசுவய்யா என்ற பெயரில் வெளியிட்டிருந்த 'யாரோ ஒருவனுக்காக', நகுலனின் 'கோட்ஸ்டாண்ட் கவிதைகள்', கல்யாண்ஜி கவிதைகள் என்ற சிறுதொகுப்புகளின் வழியாகத்தான் அவர்கள் உலகத்தின் பரிச்சயம் எனக்குக் கிடைத்தது. ஞானக்கூத்தனின் அதுவரையிலான கவிதைகளின் ஒட்டுமொத்த தொகுப்பான 'மீண்டும் அவர்கள்' மட்டும் விதிவிலக்கு. ந. பிச்சமூர்த்தி, ஞானக்கூத்தன், கலாப்ரியா மூன்று பேருக்கும் முழுத் தொகுப்புகள் அப்போது வந்திருந்தன. இந்தப் பின்னணியில் தான் மைநீல வண்ணத்தில் எளிமையால் வசீகரிக்கும் அட்டையுடன் விக்ரமாதித்யனின் 'உள்வாங்கும் உலகம்' தொகுப்பு எனக்குக் கிடைத்தது.

வாசகர்கள் படித்து, மனப் பாடமாகச் சொல்லக்கூடிய சிறுகவிதைகளையும் வாக்கியங்களையும் தமிழில் அதிகம் எழுதியிருப்பவராக விக்ர மாதித்யன் ஏன் இருக்கிறார் என்று இப்போது புரிகிறது. 'ராஜாவுக்கு விதூஷகன்/ விதூஷகனுக்கு, திரும்பிப் பார்க்கையில்/ ஊர் அழகாகக் காட்சி அளிக்கிறது, பறத்தல்/ சந்தோஷமானது/ ஆனால்/ பட்டுப்பூச்சிகள்/ மல்பரி இலைகளில் தூங்கும், ஆகமம் ஆசாரம்/ தவறாத நியமம்/ தெய்வமும் ஐதிகத்தில் வாழும்' போன்ற வரிகளை எளிமையாக அசைபோட்டுக் கொண்டே திருக்கழுக்குன்றம் பாலிடெக்னிக்குக்கு, விடுதியில் இருந்து பயணித்த நாட்கள் நினைவுக்கு வருகின்றன.

புதுக்கவிதை என்றாலே நவீனமும் சிக்கலும் என்று நினைத் திருந்த எனக்கு விக்ரமாதித்யனின் எளிமை சந்தேகத்தையும் உயர்வில்லாத எண்ணத்தையுமே முதலில் அளித்தது. ஆனால், விக்ரமாதித்யனின் சின்ன சின்ன அழகுத் துணுக்குகள் எனக்கு வசீகரத்தையும் அதே வேளையில் அவை கவிதைகள்தானா என்ற சந்தேகத்தையும் அளித்திருந்தன. அப்போது எனக்கும் என் இலக்கிய ரசனைக்கும் ஒரே ஒரு பாலமாகவும் அடையாள மாகவும் மாறியிருந்த 'சுபமங்களா' மாத இதழ் மட்டுமே திருக்கழுக்குன்றத்தில் இருந்தது.

குற்றாலத்தில் பருவகாலம் தொடங்கியதை ஒட்டி, சுபமங்களாவில் வண்ணதாசன் நேர்காணலும் இரண்டாம் பக்கத்திலேயே பொங்கிப் பிரவகிக்கும் மெயின் அருவியின் புகைப்படத்துடன் விக்ரமாதித்யனின் 'சுவடுகள்' கவிதையும் வெளியாகியிருந்தன. இப்படித்தான் என் பூர்விக ஊரான குற்றாலத்தின் தொன்ம அடையாளமாகக் கவிஞர் விக்ரமாதித்யனை நான்



படம்: சந்தோஷ்

கண்டுபிடித்தேன். அவருடைய புகைப்படமும் சிறிதாக வெளியாகியிருந்ததாக ஞாபகம் எனக்கு.

சுவடுகள்

போனவருஷச் சாரலுக்கு
குற்றாலம் போய்
கை(ப்) பேனா மறந்து
கால்(ச்) செருப்பு தொலைத்து
வரும் வழியில்
கண்டெடுத்த
கல் வெள்ளிக்
கொலுசு ஒண்ணு
கற்பனையில் வரைந்த
பொற்பாத சித்திரத்தை
கலைக்க முடியலியே இன்னும்

பேச்சு மொழியின் தடம் கொண்ட செம்மை, அருவியின் ஈரம் படர்ந்த மொழியின் சொடுக்கு மற்றும் துடி, கையில் கிடைத்த சிறுபொருள் ஒன்றால் அதை நீங்கிப்போன அந்தப் பொருளுக்குரியவளை நம் மனத்திலும் பிரமாண்டமாக வரையும் கற்பனை, உணர்வுச்சம், ஆண் - பெண் ஈர்ப்பென்னும் மாறாத இயல்பின் வசீகரம் எல்லாம் சேர்ந்திருக்கும் இந்தக் கவிதையின் வழியாக விக்ரமாதித்யன் அழுத்தமாகச் சுவடு பதித்தார்.

அப்போது கவிதைகள் வழியாகவும் கதைகள் வழியாகவும் என் மீது மிகுந்த செல்வாக்கை செலுத்தியிருந்த வண்ணதாசனின் நேர்காணல் வெளிவந்த பக்கங்களை அவர் புகைப்படத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தது ஞாபகத்தில் இருக்கிறது. அட்டைப்படத்தில் அவரது சட்டைப் பாக்கெட்டில் செருகியிருக்கும் பேனாவிலிருந்து மை கசிந்து சிறுவட்டத்தை இட்டிருக்கும். அதை எத்தனை முறை ஊன்றிப் பார்த்திருப்பேன். மதுரை காலேஜ் ஹவுஸ் லாட்ஜில் கல்தூண் பின்னணியில் புகைப்படக் கலைஞர் ரவிசங்கரால் எடுக்கப்பட்ட புகைப்படங்கள் அவை. நேர்காணலை முழுமையாகப் படிப்பேன். திரும்பப் புகைப்படங்களைப் பார்த்துக் கொண்டே இருப்பேன். திரும்ப நேர்காணலை முழுமையாகப் படிப்பேன். திரும்பப் புகைப்படங்களைப் பார்த்துக்கொண்டே இருப்பேன். காட்சி ஊடகம் அபரிமிதமாகப் பெருகாத நிலையில், ஒரு எழுத்துக் கலைஞரின் புகைப்படம் வாசகன் ஒருவனுக்குள் கொடுத்த கற்பனைகளின் விஸ்தீரணத்தை இந்தத் தலைமுறையில் உள்ள ஒருவருக்கு என்னால் புரிய வைக்கவே இயலாது.

விக்ரமாதித்யனின் ‘சுவடுகள்’ கவிதை மிகப் பிடித்திருப்பதாக, சுந்தர ராமசாமிக்குக் கடிதம் எழுதியிருந்தேன். வண்ணதாசனின் மைப்புள்ளி உள்ள அந்தப் புகைப்படத்தையும் உருகி உருகி ரசித்ததை அவருக்கு விவரித்திருந்தேன்.

பேரருவி, வற்றாத பெருநதி அனைத்தின் ஆரம்பமும் மிக எளிமையாக, மிகச் சிறிய புள்ளியொன்றில்தான் தொடங்குகின்றன. தமிழ் புதுக்கவிதை ஒதுக்கி வைத்திருந்த பேச்சுத்தமிழ், பழம் தமிழ்க் கவிதை மரபின் செழுமை,

வழக்காறுகள், பழமொழிகள், தமிழ் சினிமாப் பாடல்களின் வார்த்தை சாரம், சவடால் தன்மை, சமயப் புராணிகங்கள் எல்லாவற்றையும் எழில்களாகத் தழுவி, அவற்றை நிலைபெறவும் செய்த கவி விக்ரமாதித்யனைக் கண்டடைந்த தருணம் இப்படி எளிமையாகத்தான் தொடங்கியது. தமிழின் அழகுகள் அத்தனையையும் சூடிய கவிதைகள் விக்ரமாதித்ய னுடையது.

தமிழ்நாடு முழுக்கப் பயணித்தபடி இருக்கும் யாத்திரிகர், குடிகாரர், இளைய படைப்பாளிகளுக்கு நண்பர், கலகக்காரர் எனப் பல கதைகள் அவரைப் பற்றி உலவிய நிலையில், அவரது ஒரே ஒரு புகைப்படம் வழியாக அவர் குறித்த கதைகளுக்கு உருவம் கொடுத்து வைத்திருந்தேன். விக்ரமாதித்யனைப் போன்றே ஒரு சாயலில் இருக்கும் எழுத்தாளரும் ஆசிரியருமான கிருஷியை, ஒருமுறை நெல்லை பேருந்து நிலையத்தில், காலச்சுவடு பிரதிகளை விற்பனைக்குக் கொடுக்கும் கடையில் பார்த்தபோது, நீங்கள் விக்ரமாதித்யனா என்று கேட்ட ஞாபகம் இப்போது இருக்கிறது. அவர் சிகரெட்டை வாயிலிருந்து எடுத்து, “இல்லை இல்லை” என்று மறுத்துவிட்டு,“தம்பி நீங்கள் யாரு” என்று கேட்டுவிட்டு ஜோல்னாப் பை ஆடச் சென்றார்.

தேவதேவனுக்கு திருநெல் வேலி சீதாபதி லாட்ஜில் நடந்த இரண்டு நாள் கருத்தரங்கு நிகழ்ச்சியின் முதல் நாள் காலையில், வில்ஸ் சிகரெட்டைப் புகைத்தபடி, தும்பைப்பூ போன்ற தாடியுடன், வெள்ளைச் சட்டை, வேஷ்டியுடன், தலையைத் தலையை ஆட்டிச் சிரித்தபடி விக்ரமாதித்யனே அடுத்த சில மாதங்களிலேயே நேரடியாக அறிமுகமான தருணமும் ஞாபகத்தில் உள்ளது.

வசந்தம் வருகிறது
வண்ணத்துப்பூச்சிகள் சிறகடிக்கிறது
வாழ்வரசிகள் கூடுகிறார்கள்
ஆசைப்பட்டு

●●●

உன் பாதக்கொலுசு அழகு
இவன் மனசு இப்பொழுது
வைத்திரு பத்திரமாக
வருவான் சொந்தக்காரன்

●●●

சின்ன ராணிக்கு
என்ன குறை
குஞ்சு ராஜாவுக்கு
என்ன வந்தது

அணில்பிள்ளைகள் லாந்துவது
பார்த்து ரொம்ப நாளாயிற்று.

விக்ரமாதித்யனின் கவிதைகள் ஒரு கோயில் சுவர் ஓவியம் போல என்னில் நறுமணத்துடன் பிரமாண்டமாகப் படர்ந்திருக்கும் இன்னொரு கவிதையையும் பகிர வேண்டும். ‘இந்தியா டுடே’ இலக்கிய ஆண்டு மலரில் 1995ஆம் ஆண்டு வெளியானது. தமிழ் மரபிலக்கியத்தில் பரிச்சயம் இல்லாத எனக்கு ‘சிறுகோட்டுப் பெரும்பழம்’ என்ற தலைப்பும் அந்தக் கவிதையும் கொடுத்த பிரமாண்டம் மிகப் பெரியது. இப்போது அந்தக் கவிதைகளை எடுத்துப் பார்க்கும்போது அதிகபட்சம் 100 வார்த்தைகள் கூட இல்லாத கவிதை அது. ஆனால், அந்தக் கவிதை கொடுத்த காட்சி அழகு அபூர்வமானது. வாழ்வரசிகள் என்ற வார்த்தைச் சேர்க்கை திருநெல்வேலித் தமிழிலிருந்து உருவாக்கப்பட்டது. மகராசி, வாழ்வரசி என்றெல்லாம் சொல்லும் புழக்கத்திலிருந்து வருகிறது.

ஒரு பருவத்தின் வருகையை அதன் பூப்பைச் சொல்லி, வண்ணத்துப்பூச்சிகளில் இறங்கி, வாழ்க்கையின் பெரும் உருவகமாகப் பெண்களைச் சூட்டுகிறார் விக்ரமாதித்யன்.

கண்ணதாசன், பட்டுக் கோட்டை கல்யாணசுந்தரம் தமிழ் வாழ்க்கையில் ஏற்படுத்திய தாக்கம், ‘சின்ன ராணிக்கு/ என்ன குறை/ குஞ்சு ராஜாவுக்கு/ என்ன வந்தது’-ல் இருக்கிறது.

‘சிறுகோட்டுப் பெரும்பழம்’ என்ற நம் பழம்மரபு தந்த அழியாப் படிமத்தை ஆதி எலும்பாக ஏந்திய சொல்-வாழ்க்கைச் சித்திரம் இந்தக் கவிதை. இப்போது படிக்கும்போதும் இந்தக் கவிதையின் வினோதம் அலுக்கவில்லை எனக்கு. வெளிப்பாட்டிலும் உள்ளடக்கத் திலும் அர்த்தத்திலும் அழியாத சௌந்தரியத்தைச் சூடிக் கொண்டிருக்கும் கவிதை இது. எளிய வார்த்தைகள்தான்; பேச்சு போலத்தான் தொனிக்கிறது; இசைமையும் லயமும் கூடியுள் ளது; வனத்தைப் போல சமுத் திரத்தைப் போல ஊரைப் போல, வாழ்வு அதிரும் கவிதை இது.

விக்ரமாதித்யனின் ‘கிரக யுத்தம்’ தொகுதியும் அதிலுள்ள கவிதைகளும் எனக்கு இன்னமும் மனப்பாடமாக ஞாபகம் இருப்பவை. லக்ஷ்மி மணிவண்ணனின் சேமிப்பில் இருந்த, நேர்த்தியான வளவள தாளில் வெளிவந்த புத்தகம் அது. அப்போது அத்தகைய தரமான தயாரிப்பு அபூர்வம்.

பரு வைத்த முகம் பார்க்க அழகாய்த்
தான் இருக்கிறது
தங்கத் தேருக்குத் தனி அலங்காரம்
எதுக்கு
அம்மாவும் மகளும் போட்டி
போட்டுக்கொண்டு அழகாக
இருக்கிறார்கள்

புதுக்கவிதையில் மனப் பாடமாக ஞாபகத்தில் வாசகர்கள் சுமக்கும் அதிகபட்சமான கவிதை வரிகளை எழுதியவர் கவிஞர் விக்ரமாதித்யன்.

தமிழ் மரபின் பெரும் விளைவை, தனது சிறுவெளியீடு களில் சுமக்கும் ‘நவீன’ கவிஞன் விக்ரமாதித்யன். ●

**ஷங்கர்ராமசுப்ரமணியன்**
shankarashankara@gmail.com

# டி. கண்ணன் கவிதைகள்



1

நேற்றைய அயர்ச்சியின் மதியத்தில்
நினைவொன்றின் நீந்தலில்
படகு ஒன்று மிதந்து கொண்டிருந்தது
மேட்டிமை இசையின் உதவியுடன்
அதில் ஏறி
இன்றைய நினைவிற்கு வந்து சேர்கிறேன்
அணைந்தது இசை
தொலைந்தது படகு

2

கனவொன்றின் முடிவில்
யாரோ யாரையோ
அழைத்துக் கொண்டிருக்கிறார்கள்
இருவரும் நான்தான் போலும்
விடியலில்
பொறுப்பேற்க மாட்டேனென்கிறது
சொப்பனம்
ஆனால் மறுக்கவில்லை

3

என்றோ சொன்னதை
இன்றைக்கு
பொருத்திப் பார்த்தும்
இன்றைக்கு பகிர்ந்ததை
அன்றைக்கு
பொருத்திப் பார்க்கும்
ரசிகன் அவன்
நேற்று கூட
அக்கால நைந்த ஆடைகளை
அணிந்து கொண்டு
இன்றைய புதுச்சட்டைகளை
கடந்த காலத்திற்கு 'பார்சல்'
செய்து கொண்டிருந்தான்

4

என் அழகியலின் துணை கொண்டு
நான் காண
அந்த மோசமான திரைப்படத்தில்
மழை பெய்கிறது
அதே போல்
ஓர் நல்ல திரைப்படத்திலும்
நான் ரசிக்க
மழை பொழிகிறது
பெய்த மழைகளில்
எது நிஜ மழை? ●

**"டி. கண்ணன்"**
<krishnaswamy164@gmail.com>

# டைரக்டரி வருது



**விட்டல்ராவ்**

சென்னை தொலைப்பேசி மாவட்டத்தில் முதலில் சென்ட்ரல் எக்ஸ்சேஞ்சும் (பூக்கடை எக்ஸ்சேஞ்சு) அடுத்து மவுண்ட்ரோடு எக்ஸ்சேஞ்சும் (அண்ணா ரோடு) ஏற்பட்டன. அன்றைய (பழைய) மவுண்ட்ரோடு டெலிஃபோன் எக்ஸ்சேஞ்சில் விசாலமாயிருந்த அறையொன்றைக் காலை யிலிருந்தே துப்புரவு செய்வதில் மஸ்தூர்கள் ஈடுபட்டிருந்தனர். விசாரித்தபோது, “டைரக்டரி வருது சார்”, என்றார் ஒரு மஸ்தூர்.

அப்போதெல்லாம் நிறைய எக்ஸ்சேஞ்சுகள் இல்லை. மவுண்ட்ரோடு எக்ஸ்சேஞ்சின் பராமரிப்பில்தான் புனித ஜார்ஜ் கோட்டையுமிருந்தது. அத னுள்ளிருக்கும் செகரடேரியட், இராணுவப் பிரிவுகள் யாவும் அடக்கம். பிறகு கோட்டைப் பகுதி சென்ட்ரல் தொலைப்பேசி எக்ஸ்சேஞ்சுக்கு மாற்றப்பட்டது. இந்த மாற்றுதல் பணி முசுவாக நடந்து கொண்டிருந்தபோதுதான் எனக்குப் பணி உத்தரவு கிடைத்து மவுண்ட்ரோடு எக்ஸ்சேஞ் சில் பணியில் சேர்ந்தேன். சென்ட்ரல் எக்ஸ்சேஞ்சுக்கு அடுத்தபடியாக முக்கியமானதும் அளவில் பெரியதுமாய் மவுண்ட்ரோடு எக்ஸ்சேஞ்சு இருந்தது. முக்கியமான எல்லா திரையரங்குகள், கிரிக்கெட் ஸ்டேடியம்; சிம்சன், அடிசன், டி.வி.எஸ். நிறுவனங்கள்; ஸ்பென்ஸர் வணிக வளாகம், கன்னிமாரா ஸ்டார் ஓட்டல்; இந்து, மெயில், இந்தியன் எக்ஸ்பிரஸ், தினமணி, சுதேசமித்திரன் இதழ்களின் அலுவலகங்கள் அனைத்தும் மவுண்ட்ரோடு எக்ஸ்சேஞ்சின் கீழ் இருந்தன. எனவே, டைரக்டரி புத்தகங்கள் ஏராளமாய் வினியோகிக்கப்பட வேண்டியிருக்கும்.

“டைரக்டரி வருது” என்று சொல்லிக்கொண்டே ஒருவர் போனார். மத்தியானம் உணவு வேளையின் போது வெளியில் வந்தவுடன் அந்த பெரிய அறைக்குள் எட்டிப் பார்த்து தெரிந்துகொண்டேன். இருபது இருபதாக அடுக்கிக் கட்டப்பட்ட டெலிஃபோன் டைரக்டரிகளின் கட்டுகள் அடுக்கப்பட்டிருந்தன. அதற்குள் மவுண்ட் ரோடு எக்ஸ்சேஞ்சின் சந்தாதாரர்களில் ஒவ்வொருவருக்கும் இவ்வளவு புத்தகங்கள் என்று சரிபார்த்துக்



கணக்கிட்டு விட்டார்கள். மறுவாரம் முதல் டைரக்டரி புத்தகங்கள் சந்தாதாரர்களுக்கு வினியோகிக்கப்படும் என்று விவரமாக செய்தி பத்திரிகைகளில் அறிவித்ததோடு ஒவ்வொரு சந்தாதாரருக்கும் அச்சடித்த கடித அட்டையும் அனுப்பட்டிருந்தன.

டைரக்டரி வினியோக சேவைக்கு இரண்டு பேரைப் போடுவார்கள். விருப்பமுள்ளவர்கள் ஓர் இரண்டு மாத காலத்துக்கு அப்பொறுப்பை ஏற்க முன் வரலாம். ஒரேயொரு நிபந்தன: ஆங்கிலம் சரளமாகவும் நன்றாகவும் பேசக்கூடியவராக இருக்க வேண்டும். அனேகமாய் பலரும் பின் வாங்கிய சமயத்தில் என்னையும் பிரசன்னாவையும் பலமாகச் சிபாரிசு செய்தார்கள். எக்ஸ்சேஞ்சு அதிகாரி நம்பிஸன் எங்களிருவரையும் அழைத்து சின்ன நேர்முகத் தேர்வு ஒன்றை நடத்துவது மாதிரி விசாரித்துவிட்டு கூறினார்: “ஆனா, டை கட்டிட்டு வரணும்.”

நாங்கள் மௌனமாயிருந்தோம்.

“ஏன், டை கட்ட தெரியாதா?”

“தெரியும் சார், ஆனா, டை இல்லே”, என்றேன்.

“நான் கொண்டு வந்து தர்ரேன்” எனக் கூறிவிட்டு, மறுநாள் தம்மிடமிருந்த இரண்டு டைகளைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு நம்பிஸன் சொன்னார்: “இதிலே சின்ன ஓட்டையிருக்கு. பாச்சை கடிச்சிருக்கும். பரவாயில்லே, கட்டும்போது, அது உள்பக்கம் போயிடும், வெளியிலே தெரியாது, ஓகே.”

வேறு இருவரும் தமது கல்யாணத்தின்போது வாங்கிய தென இரண்டு டைகளை இரவல் தந்தனர்.

‘இந்த தேதியிலிருந்து இந்த தேதி வரை, தம் பழைய (சென்ற) டைரக்டரியைக் கொடுத்துவிட்டு புதியதைப்பெற்றுக்கொள்ளலாம். பழைய டைரக்டரியிலிருக்கும் கூப்பனைப் பூர்த்தி செய்து தரவேண்டும். கூப்பனில்லாதது ஏற்கப்படமாட்டாது’ என்ற அறிவிப்பு தினசரிகளிலும் சந்தாதாரருக்கு அனுப்பப்பட்ட கடித அட்டையிலும் கண்டிருந்தவை.

பல ஆண்டுகளுக்கு முன், சென்னை ஆவணக் காப்பகத்துக்குள் எதையோ தேடிக்கொண்டிருந்த போது ஓரியண்டல் டெலிஃபோன் கம்பெனி வெளியிட்ட 1924ஆம் வருட சென்னைத் தொலைப்பேசியின் டெலிஃபோன் டைரக்டரி ஒன்றைப் பார்க்க நேரிட்டேன். அது 1924ஆம் வருடத்து நவம்பர் 24இல் வெளிவந்து வினியோகிக்கப்பட்டது. 98 பக்கங்களைக் கொண்டிருந்தது. 1925 ஏப்ரல் மாதம் வெளிவந்த டைரக்டரி 124 பக்கங்களாலானது. அதில் கிட்டதட்ட 70 பக்கங்களை டெலிஃபோன் கம்பெனிக்கான விளம்பரங்களே பிடித்துக் கொண்டிருந்தன.

27-5-1925 தேதியிட்ட சுவராஜ்யா பத்திரிகையின் ஒரு செய்திக் குறிப்பு இந்த டைரக்டரியைப் பற்றியதானது.

*சென்ற டைரக்டரி வெளியானதிலிருந்து 200 சந்தாதாரர்கள் தங்கள் தொலைப்பேசியை வேண்டாமென தந்துவிட்டிருக்கிறார்கள். அதில் 90இல் பாதிக்கு ஐரோப்பியர்களும், சர்க்கார், நகரசபை மற்றும் ரயில்வேயைச் சேர்ந்தவையுமானவை. 32 புதிய சந்தாதாதரர்களும் (ஐரோப்பியர் கள்) சேர்ந்திருக்கிறார்கள். இந்த டைரக்டரியைப் பொறுத்தளவு சென்னையின் அன்றைய மொத்த தொலைப்பேசிகளின் எண்ணிக்கை 1603 அதில் சுமார் 330 தொலைப்பேசிகளுக்கான இடம் காலியாகவே காணப்படுகிறது. மீதமுள்ள 900 என்பவை ஐரோப்பியர், அரசாங்கம். ரயில்வே மற்றும் நகரசபை ஆகியவற்றைச் சேர்ந்தவர்கள்.*

நகரிலிருந்த தொலைப் பேசிகளின் எண்ணிக்கையைப் பொறுத்தது டைரக்டரியின் பக்கங்களும் தடிமனும். எனவே, அந்த 1924ஆம் வருடத்து டெலிஃபோன் டைரக்டரி நூறுபக்க பள்ளிக்கூட நோட்டுப்

புத்தகம் போல மெல்லிய காகித மேல் உறையால் போர்த்தப் பட்டிருக்கும். எண்ணிக்கை அதிகரிக்கவும் அதற்கேற்றவாறு டைரக்டரியும் தடிமனாக வளர்ந்து வந்தது. 1934இல் வெளியிடப்பட்ட டைரக்டரி பல வண்ணங்களினாலான விளம்பரங்களையும் கவர்ச்சிகர மான எழுத்துக்களையும் கொண்டிருந்தது. 1925, மே 28ஆம் தேதியிட்ட 'மெட்றாஸ் மெயில்' நாளிதழில் தொலைப்பேசி வாடிக்கையாளர் ஒருவரின் ஆசிரியருக்கான கடிதத்தில் ஒரு தகவல் தெரிய வருகிறது:

*தொலைப்பேசி சேவையை உபயோகப்படுத்தும் ஒருவன் அடிக்கடி டைரக்டரியைப் புரட்டி எண்களைத் தேடுவதில் அதிலுள்ள பெயர்களுக்கும் எண்களுக்கும் இடையில் ஏராளமான விளம்பரங்கள் அதிகார நந்திமாதிரி குறுக்கிடுவது அதீத அசௌகரியத்தை உண்டாக்குகிறது. நமக்கு வேண்டிய எண்ணைத் தேடுவது சிரமமாயிருக்கிறது. டைரக்டரி தயாரிப்பாளர்கள் இந்த விளம்பரங்களுக்காக டைரக்டரியில் முதல் சில பக்கங்களையோ கடைசி சில பக்கங்களையோ ஒதுக்கலாம். இதன் மூலம் விளம்பரம் பார்ப்பவர்களுக்குத் தனியாக ஒரு பகுதி கிடைக்கும். டெலிஃபோன் எண்களைத் தேடுவோருக்குத் தடையின்றி குறுக்கீடின்றி இருக்கும். இதை வரும் அடுத்த டைரக்டரி தயாரிப்பின் போது கருத்தில் கொள்ளும் வகையில் டெலிஃபோன் கம்பெனியின் கவனத்தை இக்கடிதம் பெறும் என நம்புகிறேன்.*

அன்றைக்கு இவ்வாசகர் கடிதம் எவ்வளவுக்குக் கவனம் பெற்று ஆவண செய்ததோ தெரியாது. ஆனால், போகப் போக டெலிஃபோன் டைரக்டரி பெரிய நிறுவனங்களின் விளம்பரங்களுக்குத் தனியாகப் பக்கங்களை ஒதுக்கியது. தபால் துறை, தொலைப்பேசி துறையின் பொதுமக்கள் தொடர்புக்கான எல்லா முக்கிய எண்கள்; ரயில், விமானம் விசாரணை தொடர்பு எண்கள்; காவல் துறை, மருத்துவமனைகள், மாநில அரசின் பல துறைகளின் எண்களையும் பிரத்தியேகமாய் தனிமைப்படுத்தி, டைரக்டரியின் ஆரம்ப பக்கங்களிலேயே பொதுமக்களின் பயன் கருதி தன் இறுதி நாள் வரை (டைரக்டரி வினியோகம் நின்று போனது வரை) வெளியிட்டே வந்தது.

நானும் பிரசன்னாவும் டை தரித்து டீக்காக உடையணிந்து டைரக்டரி வினியோகப் பொறுப்பை ஏற்றோம். கட்டுகளைப் பிரிக்க, பழைய டைரக்டரிகளைக் கட்டி வைக்க உதவிக்கு எக்ஸ்சேஞ்சு மஸ்தூர் ஒருவர் தரப்பட்டிருந்தார்.

காலையிலிருந்தே கூட்டம் வரிசை போட்டிருந்தது. மிக நீண்ட வரிசை. "பெண்களுக்குத் தனி வரிசை கிடையாதா" என்று ஒரு நடுத்தர வயதுப் பெண் கேட்டார். "அப்படி கிடையாது" என்ற பதிலால் ஏமாற்றமுற்ற அந்தப் பெண் திரும்பித் திரும்பிப் பார்த்த படியிருந்தார். பின்னால் நிறையப் பெண்கள் இருந்தனர். தமக்குப் பக்க பலமாக அவர்களும் குரலெழுப்பமாட்டார்களா என்ற நோக்கில் திரும்பிப் பார்த்த பெண் சலிப்போடு கழுத்தை சடக்கெடுத்துக் கொண்டார்.

இரண்டு நாட்கள் கழித்து ஒருவர் அவசர அவசரமாய் வந்து, "சார், முந்தா நாள் டைரக்டரி வாங்கிவிட்டுப் போனேன். என் பழைய டைரக்டரியில முக்கியமான பில் ஒண்ணை வச்சிருந்தேன். எடுத்துக்க மறந்திட்டேன். அது ரொம்ப முக்கியம்" என்றார்.

ஒவ்வொரு சந்தாதாரரும் தம் தொலைப்பேசி எண்ணை தம் டைரக்டரியின் முதல் பக்கத்தில் எழுதி வைத்திருப்பார்கள். ஆனால், இந்த இரண்டு நாட்களில் பழைய டைரக்டரிகல் ஓர் அறையில் ஏகமாய் கட்டுக் கட்டப்படாமல் இரைந்து கிடந்தன. பிரசன்னா வினியோ கத்தைப் பார்த்துக் கொள்ள, நானும் மஸ்தூரும் கிட்டதட்ட ஒரு மணி நேரத்துக்கு பழைய டைரக்டரிகளை பிரித்து பீராய்ந்து உதறிப் பார்த்தோம். சந்தாதாரரும் கூட இருந்து பிரித்துப் பார்த்தார். கடைசியில் கிடைத்துவிட்டது. சந்தாதாரர் தாமளித்த சிரமத்துக் காகப் பலமுறை மன்னிப்பு கோரியதோடு, எவ்வளவு தடுத்தும் கேட்காமல் காபி வரவழைத்து விட்டார். அன்றிலிருந்து நாங்கள் ஒவ்வொரு பழைய டைரக்டரியையும் ஒரு முறை உதறிப் பிரித்துவிட்டே அறைக்குள் வீசுவோம்.

ஒருநாள் பழைய டைரக்டரி ஒன்றைப் பிரித்து உதறியதில் நடுப்பாகத்தில் நூறு ரூபாய் நோட்டு ஒன்று இருந்தது. அந்த நபர் அதற்குள் போய் விட்டிருந்தார். அவர் முதல் பக்கத்தில் குறித்திருந்த தொலைப் பேசி எண்ணை டயல் செய்தால் மனைவி பேசினாள்.

"வெளியில போயிருக்கார், வந்ததும் சொல்றேன்" என்றார்.

ஆசாமி வரவில்லை. மீண்டும் முயன்றபோது, சிரித்துக் கொண்டே, "ஒங்கள போல ஆனஸ்டு பீப்புள்ஸ் இப்போ அபூர்வம். பரவால்லே, நீங்களே வச்சுக்கோங்க." என்று கூறி வைத்தார்.

அதிகாரி நம்பிஸனிடம் சொல்லி அப்பணத்தைக் கொடுத்தோம். நாங்களும் மறந்து போனாம். பழைய டைரக்டரிகளை உதறிப் பார்ப்பது மட்டும் நிற்கவில்லை.

டெலிஃபோன் டைரக்டரி வாங்கிச்செல்ல நேரம் கிடைக்காத வர்களும், வேறு காரணத்தால் வந்து வாங்கிச்செல்ல முடியாதவர் களுக்குமுண்டு. அத்தகையோரில்

ஓரிரண்டு பேர் நமக்கு பரிச்சய மானவர்களாயுமிருந்து விடுவார்கள். இந்த மாதிரி சந்தர்ப்பம் வெறும் பரிச்சயம் நெருக்கமான நட்பாக மாறித் தோன்றச் செய்யும். அவர்களுக்கு நாம் நட்பு கருதி, 'முறை வாசல்' செய்ய வேண்டியிருக்கும். டைரக்டரி வினியோகிக்கும் சீசன் வரும்போது மட்டும், சுகமாய் பேசி தமக்காக டைரக்டரி சுமந்து வரும் முறைவாசல் வேலை வாங்கிக்கொண்டு, காரியமானதும் விலகிப்போகும் கொஞ்சம் பெர் எங்கள் தெருவி லிருந்தார்கள்.

சில நாட்களில், எக்ஸ்சேஞ் சுக்குள் இருப்பவர்களில் சிலர் வந்து எங்கள் பக்கத்தில் நின்றார்கள். எங்களுக்கு ஏதாவது சிறு சிறு ஒத்தாசையும் செய்வார்கள். காரணம் சற்று நேரத்தில் புரிந்தது, வரிசையில் நிற்பவர்களில் யாராவது நாடக - சினிமா நடிகர்களாகவோ, பத்திரிகையாசிரியர்களாகவோ, குட்டி அரசியல்வாதியாகவோ இருந்து வைப்பார்கள். அப்படி ஒரு சமயம், அந்நாளைய நாடக - சினிமா நடிகர் வளையாபதி முத்துகிருஷ்ணன் வரிசையில் நின்றிருந்தார்.

வளையாபதி ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்று. 'ஈட்டி எட்டிய வரைத்தான் பாயும், பணம் பாதாளம் வரை பாயும்', என்ற வசனத்தைப் பேசியபடி திமிரடுத்த பணக்கார வணிகன் வளையாபதியாக முத்துகிருஷ்ணன் நடித்தது முதல் அவர் பேருடன் வளையாபதியும் இணைந்துகொண்டது. ரொம்ப சுமாராகத்தான் நடிப்பார். அதுவும்கொஞ்சம்படங்கள்தான்.

'சிவகங்கைச்சீமையில்' ஊமைத்துரை பாத்திரத்தில்கூட அவர் எடுபடவில்லை. 'தாயில் லாப்பிள்ளை' படத்தில்தேவலாம். டைரக்டரி வாங்கிக்கொள்ளும் சமயம், விரைந்து வந்த சுவிட்சு ரூம் மெக்கானிக் ஒருவர், தம் கையால் டைரக்டரியை எடுத்து வளையாபதியிடம் தந்துவிட்டு, "இப்ப எந்த படம் பண்ணிட்டிருக்கீங்க"., என்று கேட்டார்.

"நாடகம்தான்", என்றார் அவர். அவரை ஒரு முறை ஏறிட்டேன். சினிமாவில் பார்த்ததற்கும் நேரில் பார்ப் பதற்கும் கொஞ்சமும் வித்தியாச மில்லாதவராய்த் தோன்றினார்.

**1941,** ஏப்ரலில் வினியோகிக்கப் பட்ட சென்னைத் தொலைப்பேசியின் டைரக்டரி, தி அசோசியேட் பிரிண்டர்ஸ் அக்கத்தில் அச்சிடப் பட்டிருந்தது. அச்சு அமைப்பு, அச்சுப் பிழையின்மை, எழுத்துக்களின் கூர்மை, சிறந்த வடிவமைப்பெல்லாம் வேண்டி, அன்று சென்னையில் மிகச் சிறந்த அச்சகங்களில் ஒன்றாகக் கருதப்பட்ட, தி அசோசியேட் பிரிண்டர்ஸில் டைரக்டரி பணி ஒப்படைக்கப்பட்டது. பிறகு அறுபதுகளில் சிக்கனம், சிறந்த வேலைத் திறன், சந்தாதாரரை ஈர்க்கவல்ல வெகுஜன வடிவமைப்பு, சொன்ன நேரத்துக்குத் தயார் செய்து தரும் நாணயம் எனக் கருத்தில் கொண்டி டைரக்டரி தயாரிப்புப் பணியின் பொறுப்பு 'குமுதம்' அச்சகத்துக்கு அளிக்கப்பட்டது. 'குமுதம்' கொஞ்ச காலத்துக்கு தொலைப்பேசி டைரக்டரியைத் தன்தீபாவளி-பொங்கல் மலருக்கு நிகராக தயாரித்துத் தந்தது. அந்த காலத்தில் தமிழகத்தில் "குனேகா சென்ட்" எனும் வாசனைத் திரவியம் பாமர மக்களை மயக்கத்திலாழ்த்தி வந்தது. பத்திரிகைகளிலும், வானொலி விளம்பரங்களிலும், சினிமா தியேட்டர்களில் போட்டுக் காண்பிக்கப்பட்ட விளம்பர ஸ்லைடுகளிலும், 'குனேகா மருக்கொழுந்து சென்டை வாங்கி உபயோகித்து மகிழுங்கள்' என்ற விளம்பர அறிவிப்பு தோன்றியபடியே இருக்கும். 'குமுதம்' தீபாவளி - பொங்கல் மலர்கள் அருகில் வரும்போதே சென்ட் மணம் தூக்கும். 'சீப் சென்ட்' என்பார் என் நண்பர். ஒரு சமயம்,ஜாம்பஜார் பள்ளிவாசலில் இருக்கும் சென்ட் அத்தர் விற்கும் கடையைக் கடக்கும் போது அனுபவித்த நறுமணம் போலவுமிருக்கும். 'குமுதம்' தீபாவளி மலரைப் பிரித்ததும் முதல் பக்கத்திலேயே, "நீங்கள் அனுபவிப்பது எங்கள் குனேகா மருக்கொழுந்துசென்டின் மணம்", என்று காணப்படும். சென்னைத் தொலைப்பேசி டைரக்டரிகள் பல காலம் குனேகா சென்டின் நறுமணத்தை மென்மையாக சந்தாதார்களுக்கு அவர்களின் மகிழ்ச்சியை, ஆர்வத்தை, முகஞ்சுளிப்பை, சிலபோது அருவருப்பையெல்லாம் - அந்தந்த நபருக்குத் தக்கபடி அளித்து வந்தது.

அதன் பிறகு சென்னைத் தொலைப்பேசி தன் சந்தாதாரர் களுக்குடைரக்டரிரீதியாகச்சிறந்த சேவை அளிக்கும் எண்ணத்தோடு டைரக்டரி தயாரிப்பைச் சந்தையில் பிரபலமான 'யெல்லோ பேஜ்' நிறுவனத்திடம் விட்டது. 'யெல்லோ பேஜ்' தன் மீது வைத்த நம்பிக்கைக்குப் பங்கம் வராதபடி அதி சிறப்பாகவே டைரக்டரி தயாரிப்பை முடித்துத் தந்ததோடு, 'யெல்லோபேஜ்' என்றபிரத்தியேக விளம்பரப் பகுதியை ஒரு குட்டி டைரக்டரியின் தடிமன் அளவுக்கு மஞ்சள் நிறக் காகிதங்களில் அச்சிட்டு டைரக்டரியுடன் சேர்த்து வெளியிட்டது.

சென்னைத் தொலைப்பேசி பி.எஸ்.என்.எல். ஆனபிறகும் தொடர்ந்து டைரக்டரியை வெளியிட்டு வந்தது. நான் பணியிலிருந்து ஓய்வு பெற்று பெங்களூருக்கு வந்த பிறகு 2011 வரை டெலிஃபோன் டைரக்டரி பெற்று வந்தேன். அதன் பிறகு டைரக்டரி தயாரிப்பு - வினியோகம் என்பது நிறுத்தப்பட்டது.

(தொடரும்)

# வேல் கண்ணன் கவிதைகள்



ஓவியம்:
அபராஜிதன்

## நினைவின் வலிகள்

அக்கம் பக்கத்தவர்களின் இழப்புகள்
இணை பணியாளர்களின் விபத்துகள்
நிகழ்ந்த வண்ணமே இருக்கின்றன
அவ்வப்போது துர்மரணங்களும்.

நெடிய தயக்கத்திற்கு பின்பான அழைப்பு
'Speaking to someone'இன் 'else'யை
அழுத்துகிறது, பதிலாக
இழவோ, நோய்மையோ,
வந்தவர்கள் உன் செல்போன் மீது ஏறி
அமர்ந்து கொள்கிறார்கள்.

வாரங்கள் கடந்த அழைப்பில்
ஏதேதோ காரணம் சொல்லுகிறாய்
மழை கொட்டுகிறது
யார் இறந்ததாக சொன்னாலும்
நம்பிவிடும் மழை
எனைத் தவிர்த்து சாரல்களைக்
கோர்த்துக் கொண்டிருக்கிறது

## மாயக் கொம்பு

நிழல்களில் தங்கிவிட்டன
விரும்பிய நிறங்கள்.
முச்சுக் காற்றில்
அர்த்தமிழந்து சுழல்கின்றன



நேசித்த சொற்கள்.
அணைந்ததாய் நினைத்தது
நீருபூத்த கங்குகளில் காத்திருக்கின்றன
இணைந்தே அந்தமடைவோம்
என்றுரைத்த நம்மிடையே
தனித்தனியாக

சிறு மலையொன்று,
மொசக்குட்டியின் மெதுமெதுப்புடன்.
சிறு மலர்த் தோட்டம்,
கையடக்கமான பூக்களுடன்.
'ஜோ' வென்று கொட்டும் அருவி
மொண்டு குடிக்கும் அளவிலும்
அள்ளிப் பருகும் சுவையிலும்,

சிறியதொரு புத்தகம் முன்பின் பக்கங்களற்ற
படிக்க படிக்க வளரும் கவிதைகளுடன்,
சிறார்கள் கட்டிய மணற்கோபுரம்
நழுவாத இளகிய துகள்களுடன்,
நிலச்சரிவு உருண்டோடி வந்த பாறை
வழுக்காத பளபளப்புடன்
நிலைத்திருக்க சாத்தியமெனில்..

அபஸ்வரத்தில் தொடங்கி
மௌனத்தில் உள்ளடங்கும்
மாயக் குதிரையின் கொம்பு.

## அந்தரத் தோட்டம்

என்னுள் ஒளிர்ந்து எந்நேரமும்
பிழம்புகளை உமிழ்ந்தபடியே
நிறைமுகம் காட்டுகிறது, சூரியன்.
கனவுக் கதவுகளை அறைந்து சாத்தியபடியே
நொடியில் பிளந்து கொட்டுகிறது, மழை.
கசையடிகள் கொடுத்தபடியே
நித்தியதுவத்தை கடத்த முயல்கிறது, காலம்.
வெள்ளைக் காகிதம் நிரம்ப
எழுதித் தள்ளுகிறது, விழுங்கிய தூக்க மாத்திரைகள்.

நூல் ஏணிகள் அறுபட்டு
மிதக்கும் பாறைகள் நிரம்பிய
என் அந்தரத் தோட்டம்
பூமிக்கு வெளியே
சிதறியபடியே நிகழ்கிறது. ●

**வேல் கண்ணன்** <velkannanr@gmail.com>

# பாரதி மணி
## எனும் கரும்பு மனிதர்!



**ஸிந்துஜா**

பாரதி மணி அறிமுகமானது எனக்கு எப்போது? பழைய 'காலச்சுவடு' இதழ் ஒன்றில் எழுதியிருந்த, "நான் பார்க்காத முதல் குடியரசு தின விழா' என்கிற கட்டுரைத் தலைப்பே வம்புக்கு இழுத்துப் படிக்கத் தூண்டிற்று. கட்டுரை நெடுகத் தளும்பிக் குதித்த நகைச்சுவையும் இசை பற்றிக் குறிப்பிடுகையில் காணப்பட்ட உணர்ச்சி வசப்படலும் என்னைக் கவர்ந்தன. கட்டுரை எழுதியவரின் பெயர் பாரதி மணி என்று குறிப்பிடப்பட்டிருந்தது. சில வாரங்கள் கழித்து ஒரு புத்தகக் கண்காட்சியில், 'பல நேரங்களில் பல மனிதர்கள்' என்ற புத்தகத்தின் அட்டையில் பாரதி மணி என்ற பெயரைப் பார்த்ததும் பழைய ஞாபகம் வந்தது.

தன்னை ஒரு எழுத்தாளராக ஒருபோதும் அழைத்துக் கொள்ளாத அல்லது அழைத்துக்கொள்ள விரும்பாத எழுத்தாளராகத்தான் அவர் இருந்து வந்திருக்கிறார். தனியாகவும் குழுவாகவும் சுய விளம்பரத்தில் மிகுந்த ஈடு பாட்டுடன் செயல்படும் இன்றைய எழுத்தாளர்களின் சமூகத்தில் இது ஆச்சரியமான நிகழ்வு.

அவருடைய முதல் புத்தகம் வெளிவந்த பின் அவருக்கு அமைந்த வாசகர் வட்டம், நகரங்களை மட்டுமல்ல மற்ற நாடுகளையும் சென்றடைந்தது அவருக்கு ஒரு விதக் கூச்சத்தை அளித்தது என்று அவருடன் எனக்குண்டான முதல் சந்திப்பில் (2017) நான் அறிந்தபோது, எனக்குக் கூச்சம் ஏற்பட்டது!

எழுத்து மூலமாக தனக்கு நிறைய நண்பர்கள் கிடைத்ததுதான் அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியை வழங்கிய விஷயம். நாடகம் தராத அன்பை, மரியாதையை அவருடைய புத்தகங்கள் கொண்டு வந்து தந்தன. சினிமாவில் நுழைந்ததும் இருந்ததும் பற்றிக் குறிப்பாகச் சொல்ல எதுவுமில்லை என்று ஒரு சந்தர்ப்பத்தில் குறிப்பிட்ட அவர், சினிமாவை டவுன் பஸ்சுடன் ஒப்பிட்டார். "ஏண்டா தலையைக் கொடுத்தோம் என்று அதிருப்தியை ஏற்படுத்திய அனுபவங்கள்! ஹீரோவின் தாத்தா, ஹீரோயினின் தாத்தா என்று பாத்திரம் வரும். மூணாவது சீனில் இறக்கி விட்டுவிடுவார்கள். மறுபடியும் ஐந்தாவது சீனில் ஏறிக்கொள்ளச் சொல்லுவார்கள்" என்றார்.

மற்ற மொழிகளில் நாடகங்கள் ஏற்படுத்திய குடும்ப சமூக உறவுகளின் மீதான தாக்கத்தைத் தமிழில் காண முடியாமல் போனதற்குக் காரணம், நாடகங்கள் தம் முதுகில் சினிமாக்களைத் தாங்கிக்கொண்டு கோட்டை விட்டதுதான் என்றும் அவர் அபிப்பிராயம் கொண்டிருந்தார். பெங்காலியில் மராத்தியில் வரும் ஒரு பாத்திரம் நடுவில் தலையைக் காட்டிவிட்டு மட்டும் போவதில்லை. கதையம்சம், அந்தச் சிறு பாத்திரத்தையும் நாடகத்தின் இறுதிக் காட்சிகளில், அதன் முக்கியத்துவத்தை



உணர்த்திவிட்டுப் போகும்படி அமைந்திருக்கும். தமிழில் நாடக இயக்குநர் சகலகலா வல்லவனாக கதை, வசனம், நடிப்பு, இயக்கம் என்று தன்னைக் காண்பித்து கொள்வதில் நாடகத்தின் இறுக்கமும் உயிர்த்தன்மையும் அவற்றின் இயல்பான வலிமையை இழந்து விடுகின்றன.

இதிகாச கதைகளை முன்வைத்து இயக்கப்பட்ட நாடகங்களின் காலத்திற்குப் பிறகு, சமூக அக்கறையுடன் எழுந்த நாடகங்கள், புதிய சிந்தனைகளை வளர்ப்பதற்கு இடம் கொடுக்காத காரணத்தினால் சபா நாடகங்களாகவும் சிரிப்புக் கொத்துக்களாகவும் தேய்ந்து போகும் நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டன. இந்த ஜனரஞ்சகத்தை மறுத்து எழுந்த நாடக எழுத்து என்று இந்திரா பார்த்தசாரதியின் 'மழை', 'போர்வை போர்த்திய உடல்கள்', 'நந்தன் கதை' ஆகியவற்றைக் குறிப்பிட வேண்டும். பாரதி மணியும் இந்திரா பார்த்தசாரதியும் ஒரே காலகட்டத்தில் தில்லியில் வசித்ததாலும்; 'நேஷனல் ஸ்கூல் ஆஃப் டிராமா', 'லண்டன் ஸ்கூல் ஆஃப் டிராமா' ஆகிய முதல்தரமான நாடகப் பயிற்சிப் பள்ளிகளில் சேர்ந்து நடிப்பு, குரல் வளம் ஆகிய துறைகளில் சிறந்த பயிற்சி பெற்று பாரதி மணி தலைநகரில் தன்னுடைய நாடக விஜயத்தை ஸ்தாபித்ததாலும் எழுந்த இரு மனங்களின் கூட்டுறவில், 'மழை' வெளிவந்தது. தலைநகரிலும் மற்ற இடங்களிலும் அந்நாடகம் பெற்ற வெற்றி அது மிகுந்த கவனிப்பைப் பெற்றது என்பதைச் சுட்டிக்காட்டியது.

'மழை' பற்றிப் பேசும்போது தமிழ்நாட்டில் அது அரங்கேறிய விதம் வருத்தம் தரும் நிகழ்வாக இருந்தது. பாரதி மணியின் சொற்களில், "தமிழ் நடிகைகள் ஏராளமாகக் கொட்டிக் கிடக்கும் இடம் தமிழகம். நாங்கள் தில்லியில் நாடகம் நடத்திய போது தமிழ் பெண் நடிகைகள் என்று யாரும் கிடைக்கவில்லை. அதனால் நாங்கள் எங்களுக்குத் தெரிந்த அரசாங்க அதிகாரிகளின் மனைவிகள் அல்லது அவர்களது பெண்கள் ஆகியோரைச் சந்தித்து கதாநாயகியான நிர்மலாவின் பாத்திரத்திற்குத் தேர்ந்தெடுத்தோம். வசன உச்சரிப்பு, முகபாவம், நடை உடை என்று எல்லாவற்றிலும் அகர முதல என்று ஆரம்பிக்க வேண்டியிருந்தது. கஷ்டங்களைப் பொருட்படுத்தாமல் இறங்கி

வெற்றியும் அடைந்தோம். ஆனால், தமிழ் நாட்டில் நடந்தது என்ன? அவர்களுக்கு உயிருள்ள தமிழ்ப் பெண் நடிகை யாரும் கிடைக்கவில்லை! பெண் குரலை ஒலிக்க வைத்து நாடகம் நடத்தினார்கள். இதற்கு யாராவது புதுமை என்று பெயரிட்டிருந்தால் அந்தக் கீழ்ப்பாக்க ஆளை நான் சந்திக்க விரும்புகிறேன்!" என்றார்.

நாடகத்தின் மேல் அவருக்குச் சிறு வயதிலிருந்தே ஈர்ப்பு ஏற்பட்டதற்குக் காரணம் அவர் தந்தையின் வீடு திருவனந்தபுரத்தில் ஒரு வேடந்தாங்கலாக இருந்ததுதான். எம்.கே.டி. பாகவதர், என்.எஸ். கிருஷ்ணன், டி.கே. ஷண்முகம், 'யதார்த்தம்' பொன்னுசாமிப் பிள்ளை என்று பெரிய நடிகர் கூட்டம் தகப்பனாரைச் சுற்றி இருந்தது. அவர்கள் வந்து தங்கிவிட்டுச் செல்லும் போது மாடியில் அவர்களுக்குக் காப்பி டீ டிபன் கொண்டு போய்க் கொடுப்பதிலிருந்து தனக்கு நாடக ஆர்வம் ஏற்பட்டு வளர்ந்தது என்று கண்ணைச் சிமிட்டிக்கொண்டே ஒரு தடவை கூறினார். ஒரு தடவை கோடை விடுமுறையின் போது, அவரது தகப்பனார் தன்னுடைய நெருங்கிய நண்பரான நவாப் ராஜமாணிக்கத்திடம், "இவன் லீவு நாளில் இங்கே வெறுமனே 'மாடு மேய்ச்சிண்டு' இருக்கறதுக்குப் பதிலா உங்களோட இருக்கட்டும்; இவனுக்கு நடிக்கவெல்லாம் வராது. உங்க கிட்டே கொஞ்சம் டிசிப்ளின் கத்துக்கட்டும்" என்று அனுப்பி வைத்தாராம். அதன் பிறகு நவாப் ராஜமாணிக்கம் எந்த ஊரில் இருந்தாலும் பின்வந்த மூன்று வருஷ கோடை விடுமுறைகளில் அவருடைய நாடகக் குழுவினருடன் இருந்து உடம்பை எப்படி ட்ரிம்மாக வைத்துக்கொள்வது, குரலில் எப்படி ஏற்ற இறக்கங்களைக் கொண்டு வருவது போன்ற விஷயங்களைக் கற்றுக் கொண்டிருந்திருக்கிறார்.

திருவனந்தபுரம், நாகர் கோவிலில் பள்ளிப் படிப்பு. அப்போது செம்மங்குடி சீனிவாச அய்யரின் பையன் கோபாலசாமி, தமிழ் எழுத்தாளர் நீல பத்மநாபன் ஆகியோர் இவரது வகுப்புத் தோழர்கள். எஸ்.எஸ்.எல்.சி. பாஸ் செய்த சர்டிபிகேட்டுடன் தில்லிக்கு ரயில் ஏறிச் சென்ற பாரதி மணி எம்.பி.ஏ. படித்து முன்னேறியது தில்லியில்தான்.

இலக்கியம், எழுத்து ஆகிய வற்றுடன் தனக்கு அவ்வளவாக சம்பந்தம் இல்லை என்பது போல அவர் காட்டிக்கொள்ள முயன்றாலும் அவரைச் சுற்றி இருந்த எழுத்தாளர்களும் வாசகர்களும் தீவிர இலக்கியப் படைப்புகளுடன் நெருங்கிய உறவு கொண்டிருந்தவர்கள். அவருடைய முதல் புத்தகமான "புள்ளிகள் கோடுகள் கோலங்களுக்கு' முன்னுரை எழுதிய வெங்கட் சாமிநாதன், இந்திரா பார்த்தசாரதி, நாஞ்சில் நாடன், ஜெயமோகன், வண்ணதாசன் என்னும் வரிசையைப் பார்க்கும் போது பாரதி மணியின் கூற்று உண்மை நிலைமைக்குச் சற்று அப்பால்தான் இருக்கிறது என்று நமக்குத் தோன்றுகிறது. மௌனி, சி.சு. செல்லப்பா ஆகிய இருவருடன் மிக நெருங்கிய பழக்கம் கொண்டிருந்த அவரை இருவரும், "மாப்பிள்ளே!" என்றுதான் கூப்பிடுவார்கள் என்ற அவர், தன்னுடைய ஒரிஜினல் மாமனார் தன்னை அப்படி ஒருமுறைகூடக் கூப்பிட்டதில்லை என்று அழகியசிங்கருடன் நடந்த ஒரு பேட்டியில் கூறினார். தமிழின் சிறந்த விமரிசகரும் நாவலாசிரியரும் கவிஞருமான அந்த மாமனார் க.நா.சு.வின் பெயரை பாரதி மணி ஒரு சிபாரிசாகவோ அடையாள அட்டையாகவோ உபயோகப் படுத்தியதில்லை என்பதையும் குறிப்பிட்டாக வேண்டும்.

அவரது இரு தொகுப்புகளைப் படித்து முடிக்கும் ஒரு வாசகர் மனதில் பாரதி மணி ஒரு 'ஒன்-மேன்' உதவும் கரங்கள் என்ற நினைப்பைத் தவிர்க்க முடிவதில்லை. பாரதி மணியின் உதவும் தன்மை ஏதோ வள்ளல் வகைப்பட்டதில்லை; யாசிக்கும் போது கொடுத்தருளுவது என்பது போல. முழுமனதுடன், அபிமானத்துடன், தேவை அறிந்து சிரத்தையுடன் சென்று உதவும் செயல்களாக நம்மை மணி செய்யும் உதவிகள் எதிர்கொள்கின்றன. 'தில்லி நிகம்போத் சுடுகாடு' கட்டுரை தெரிவிக்கும் நுணுக்கமான மனித மன உணர்வுகள், சாதாரணர்கள் அவர்கள் வாழ்வின் கடைசிக் கட்டத்தில் படும் துயர்கள், அவர்களைச் சுற்றியிருப்பவர்களின் நிர்ப்பந்தங்கள் நெருடல்கள் ஆகியவற்றைப் புரிந்துகொண்டு சீரிய மனிதாபிமானத்துடன் பாரதி மணி ஆற்றும் உதவிகள் நம்மை கலங்க அடிக்கின்றன. அவரது எழுத்தில் மிகைப்படுத்தப்பட்ட துக்கம், இரக்கம், புருவம் தூக்கல் இவை எதுவும் மருந்துக்குக் கூடக் காணோம் என்பதே உண்மை. அதுவும் இன்றைய தமிழின் சில உயரிய / சீரிய / இரக்க / துக்க / மனிதாபிமான தொழில் திறமை வழிந்து தள்ளும் சோக எழுத்துக்களிலிருந்து மணியின் எழுத்து வேறுபட்டிருக்கிறது என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும்.

பாரதி மணியின் பேச்சிலும் எழுத்திலும் எப்போதும் ஒரு வித எளிமையும் இனிமையும் காணப்பட்டன. மனிதர்களை நேசித்து நட்புப் பூணுவதில் அவருக்கு மிகுந்த ஆர்வம் இருந்தது. அவர் எழுதிய கட்டுரைகளை விட அவரைப் பற்றிய கட்டுரைகள் அதிகமாக வெளிவந்தது அவர் நட்பைப் பேணிய விதத்துக்குச் சான்றாக இருக்கிறது.

எழுத்துக்களில் அவருக்கே பிரத்தியேகமான நகைச்சுவை மிளிர்வதை அவருடைய கட்டுரைகளில் காணலாம். அவருடைய திருவிதாங்கூர் சமஸ்தானம் பற்றிய கட்டுரையில் ஒரு பகுதி:

*நாம் வசிக்கும் அறையின் கொள்ளளவு கொண்ட பெரிய வெங்கல உருளிகளில்தான் சாம்பார், ரசம் வைப்பார்கள். இதற்குப் புளி கரைக்க, இரண்டு மூட்டை புளியை அப்படியே உருளியில் சாய்த்து,*



*யானைக்கால், பித்த வெடிப்பு இல்லாத சமையல்காரர்களை, கால்கழுவிவிட்டுஏணிவழியாக பிரும்மாண்டமானஉருளிக்குள் இறங்க செய்வார்கள். சிறு வயதில் இதைக் கேள்விப்பட்ட நான், என் அப்பாவைக் கேட்ட குழந்தைத்தனமான கேள்வி: "அந்த சமயத்தில் அவங்களுக்கு ஒண்ணுக்கு வந்தா என்னப்பா செய்வாங்க?"*

பாரதி மணியின் எழுத்துக் களைப் பற்றி என்னிடம் ஒருவர் சொன்ன கருத்து முற்றிலும் வித்தியாசமாக இருந்தது. அவரும் தில்லி ஆசாமிதான், எழுத்தாளரும் பத்திரிகைகாரரும் கூட. ஏன் பாரதி மணியின் நெருங்கிய நண்பர் என்றும் சொல்லிக்கொள்பவர். அவர் சொன்னார்: "மறைந்தவர்களைப் பற்றி உயிருடன் இருப்பவர்கள் 'துதிப்பது' இரண்டு விஷயங்களுக் காக. ஒன்று, உயிருடன் இருப்பவரின் எழுத்துக்களை பற்றி, நாடகங்களை பற்றி செத்துப் போன மனுஷன் சொல்லாத புகழ் ஆரங்களை எல்லாம் தன் மீது சூட்டிக்கொள்ள! செத்துப் போனவன் எழுந்து வந்து கேட்கப் போவதில்லை என்னும் தைரியம்தான். இரண்டாவது, மறைந்தவர் உயிருடன் இருந்த போது அவரது கஷ்ட காலத்தில் எல்லாம் நான்தான் கை தூக்கிவிட்டேன் என்று மார்தட்டிக் கொள்ள."

உலகத்தில்தான் எவ்வளவு விதமான அபிப்பிராயங்கள்!

நான் பாரதி மணி காலமா வதற்கு மூன்று வாரம் முன்பு அவரது வீட்டிற்குச் சென்று அவரைப் பார்த்தேன். ஆள் மிகவும் தளர்ந்து விட்டிருந்தார். படுக்கையில் சாய்ந்தபடி அவரைக் கண்டது அதுதான் முதல் தடவை. அதற்கு முன் சந்திப்புகளில் கையில் பைப்புடன், வாயில் சிரிப்புடன், கண்களில் குறும்புத்தனத்துடன் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு மணிக்கணக்கில் பேசிய தருணங்கள் நினைவுக்கு வந்து துன்புறுத்தின. முகநூலில் எங்கள் சந்திப்பைப் பற்றி எழுதும் போது, "ஸிந்துஜா வீட்டிற்கு வந்திருந்தார். வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தோம். அதாவது வெகுநேரம் நான் பேசிக் கொண்டிருந்தேன்!" என்று எழுதினார்.

அன்றும் நான் அவரைப் பார்க்கச் சென்றபோது, "எதற்கு மிகுந்த தொலைவிலிருந்து அவரைப் பார்க்க வந்தேன்?" என்று கேட்டவர், "ஆனால், எனக்கு சந்தோஷமாக இருக் கிறது, இப்படி வந்து பார்த்தது" என்று நெகிழ்ச்சியுடன் சொன்னார். இரண்டாவது புத்தகத்தில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார். ஆனால், காலன் வாசல் படியில் நின்று கொண்டிருப்பதை உணர்ந்தவராக, "வயசும் ஆயிடுத்தே. இருந்த வரைக்கும் சந்தோஷமாக இருக்க கடவுள் அனுமதி கொடுத்தானே, அதுதான் எனக்கு கிட்டிய பெரிய பாக்கியம்" என்றார்.

போய் வாருங்கள் பாரதி மணி! உங்கள் புத்தகங்கள் உங்கள் அருகாமையை உணர்த்து வனவாக புத்தக அலமாரி யிலிருந்து என்னைப் பார்த்து கொண்டிருக்கின்றன. ●

**ஸிந்துஜா** weenvy@gmail.com

# நிகழ்காலம் ஏற்கெனவே கடந்துவிட்டது!

ஜேவியர் மரியாஸ்



தமிழில்:
ஜெகநாத் நடராஜன்

ஜேவியர் மரியாஸ் பரவலாக அறியப்பட்ட சமகால ஸ்பெயின் நாட்டு எழுத்தாளர். ஜேவியர், தன் மிகச் சிறிய வயதிலேயே புனைகதைகளை எழுத ஆரம்பித்து விட்டார். 'The Life and Death of Marcelino Iturriaga', 'While The Women Are Sleeping' ஆகியவை அவரது 14ஆவது வயதில் எழுதப்பட்டது. அதன் பிறகு மாட்ரிட் கம்ப்ளூட்டன்ஸ் பல்கலைக்கழகத்தில் பயின்றபோது தாமஸ் பிரவுண், லாரன்ஸ் ஸ்டெர்ன், வாலஸ் ஸ்டீவன்ஸ் உள்ளிட்ட பலரது படைப்புகளை மொழியாக்கம் செய்தார். கட்டுப்பாடுகளற்ற, ஆன்மீகமயமான இத்தகையோர் எழுத்துக்களின் சாயல்கள் பின்னாட்களில் எழுதப்பட்ட 'Your Face Tomorrow' என்ற மூன்று பாகங்கள் கொண்ட ஜேவியர் மரியாஸின் சிறந்த படைப்புக்குப் பின்புலமாக இருந்தன. 'புருஸ்டியன்' (Proustian) எனப்படும் கடந்த காலமும் நிகழ்காலமும் இணைந்து சிதையும் ஒற்றன் வகை நாவலான இது, 1000 பக்கங்களில் இறுக்கமான சொல்லாடல்களைக் கொண்டது.

புனைவின் சாத்தியமற்ற தன்மை களைச் சாத்தியமாகவும், உண்மைக்கும் வரலாற்றிற்கும் நிகழ்காலத்திற்கும் உரிய தொடர்புகளை முன்னிறுத்துவதிலும், மொழிபெயர்ப்பின் சாத்தியமின்மையைத் தாண்டியதுமான கூறுகள் ஜேவியர் படைப்புகளை நிரவியிருந்தன. ஹாவியேரின் 'All Souls' ஸ்பானீஷ் இலக்கியத்தின் போக்குகள் குறித்த நாவலாக ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழகத்தில் இடம்பெற்றிருக்கிறது. 80களில் இரண்டு ஆண்டுகள் அவர் மொழிபெயர்ப்பு பற்றி பயிற்றுவிக்கவும் செய்திருக்கிறார்.

*இது 'The White Review' தளத்திற்கு ஜேவியர் மரியாஸ் அளித்த நேர்காணலின் மொழிபெயர்ப்பு*

**காணாமற்போன அல்லது மறைக்கப்பட்ட வரலாற்றுத் தருணங்கள்; அல்லது கவனம் பெறாமல்போன, மறக்கப்பட்ட எழுத்தாளர்களின் படைப்புகளை மீட்டெடுக்கத் தோன்றும் உத்வேகம் குறித்து? அந்த எழுத்தாளர்களிடம் கடமை மற்றும் பொறுப்புணர்வை நீங்கள் உணர்கிறீர்களா?**

*அதுபற்றி எனக்குத் தெரியாது. பிரென்ஞ்ச் மொழியில் அதை*

எப்படி சொல்வார்களென்றால், தவறு அல்லது பரிதாபம். கவனிக்கப்படாமல் போனவர்கள் பற்றிய பரிதாபம்; அல்லது மிக இளமையிலேயே இறந்து போனவர்களுக்கான சிறப்புப் பரிதாபம். 'Malogrado' என்ற ஸ்பானிஷ் வார்த்தை பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? ஆங்கிலத்தில் அந்த வார்த்தை இருக்காது. ஆசைகள் நிறை வேறாமல் சூழ்நிலைகளால் மரித்துப் போனவர்கள் பற்றிக் குறிப்பிடுவது அது. நான் அவர்களைக் குறித்த பல வீனத்தைக் கொண்டிருக்கிறேன். 1989இல் நான் வெளியிட்ட 'Unique Stories' என்ற தொகுப்பு என்னிடம் இருக்கிறது. வரலாற்றை அவர்கள் கடக்கவோ படைப்புகளில் வடிக்கவோ இல்லையென்றாலும், அந்தக் காலகட்டத்தில் ஒரே ஒரு சிறப்பான அல்லது சிறப்பான தன்மைகளுடன் கூடிய ஆவிக் கதையையாவது அவர்கள் எழுதியிருக்கிறார்கள். முடிவில் நாம் எதையும் தீர்மானிக்கவே முடியாது.

வின்ஸ்டன் சர்ச்சில் ஒரு கதை எழுதியிருக்கிறார். அவர் மிகப் பிரபலமானவர்; ஆனால், அந்த நல்ல கதையை எழுதியதால் அல்ல, ரிச்சர்ட் மிடில்டன் இறந்துவிட்டார்; அவர் சில நல்ல கதைகளை எழுதியிருக்கிறார். இன்னொரு எழுத்தாளர், மார்லொவ்; அவர் தன் 29ஆவது வதில் மறைந்தார். இவர்கள் என்னதான் செய்திருக்க முடியும். அவர்களுக்காக நான் பரிதாபப் படுகிறேன். அது காலத்தின் இருண்ட நிலை பிரதிபலிப்பு. இது கடமையா? இல்லை இது அவர்களுக்கு ஒரு வகையிலான அனுதாபம்.

காலத்தின் இருட்டில், நான் சந்திக்காமல் போன எனது மூத்த சகோதரனைப் பற்றி நான் பேச விரும்புகிறேன். ஏனெனில், நான் பிறப்பதற்கு முன்பாக அவர் இறந்துவிட்டார். அவரைப் பற்றி நான் எழுத்தில் சொன்னது ஞாபகம் இருக்கிறது. 'இந்தக் குழந்தை நாங்கள் பிறந்த அதே அப்பாவுக்கும் அம்மாவுக்கும் பிறந்தது.' இறந்துவிட்ட அவரும் என் மற்ற மூன்று சகோதரர்களைப் போலவே ஒரு சகோதரர். அவர் எனக்குக் காற்றைப் போல இயற்கையாக இருந்திருப்பார். நான் வெளிப்படுத்தியது - இந்த உணர்வு - குற்றவுணர்வில்லை. ஏனென்றால், அது குற்றமில்லை. ஆனால், நான் ஏன் இங்கே இருக்கிறேன்? நான் ஏன் விஷயங்களை எழுதுகிறேன்? அவர் யாராக இருந்திருப்பார்? என்ன செய்திருப்பார்? அவர் எங்கே? ஒரு சிலர் அவரைச் சந்தித்திருப்பார்கள்; அவரைச் சந்தித்தவர்களில் பெரும்பாலோர் இப்போது இறந்துவிட்டனர். நான் அவரை சந்தித்ததில்லை. அவர் இருக்கிறார் என்று எனக்குத் தெரியும்; ஆனால், இன்னும் சில ஆண்டுகளில் அவர் இருப்பு அவரைத் தெரியாதவர்களின் நினைவில் காணாமல் போகும், எனக்கும் கூட. ஏனென்றால், எனக்கும் அவரைத் தெரியாது. அவர் பிறந்தது 1945, இறந்தது 1948 அல்லது 1949ஆக இருக்கலாம். நான் பிறந்தது 1951.

இந்த இறந்த சகோதரனைப் பற்றிப் பேசும்போது அந்த மாதிரியான உணர்வு எளிதில் வெளிப்படுகிறது. அது அந்த உணர்வுடன் தொடர்புடையது. மறக்கப்பட்ட அல்லது கவனிக் கப்படாத அல்லது நிறை வேற்றப்படாத விஷயங்கள்; அவர்கள் இருந்திருந்தால் நடந்திருக்கக் கூடிய விஷயங்கள். அது பற்றியெல்லாம் எனக்கு ஒரு பலவீனம் உண்டு. அதனால்தான் சிலரை நான் மீட்டெடுக்கிறேன்.

மிகவும் ஆர்வமுள்ளவர் களுக்கும் ஒரு பலவீனம் உள்ளது; உதாரணத்திற்கு மிகவும் நன்றாக இல்லாத எழுத்தாளர்கள். 'Ed Wood', உங்களுக்கு 'Ed Wood' திரைப் படம் நினைவிருக்கிறதா? ரிச்சர்ட் பர்ட்டனின் சிறந்த படம் இது என்று நான் நினைக்கிறேன். அவருடைய சமீபத்திய படங் கள் கிட்டத்தட்ட பார்க்க முடியாதவை. அந்த மனிதர் தன் படத்தைப் பார்க்க வைக்க எவ்வளவு உற்சாகமாக இருந்தார், எவ்வளவு அர்த்தமுள்ளவராக இருந்தார்; ஆனால், அதே சமயம் அவர் எப்படி இருந்தார் என்பதையும் அவர் உங்களைப் பார்க்கச் செய்தார் என்பதையும் யோசித்துப் பாருங்கள். அவர் செய்ய விரும்பியதைச் செய்யும் அளவிற்கு மிகவும் திறமையானவர் அல்லர். ஆனால், உற்சாகமான அத்தகைய நபர்களை நாம் அனைவரும் அறிந்திருக்கிறோம்.

மேலும், அவர்கள் ஏதாவது செய்து வெற்றிபெற வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள்; ஏனென்றால், அவர்கள் செய்யும் செயல்களை அவர்கள் மிகவும் ஆர்வமுடன் செய்கிறார்கள். அது அவர்களிடமும், அதைச் செய்ய முடியாதவர்களிடமும், செய்யத் தகுதியில்லாதவர்களிடமும் ஒரு மென்மையை உணர வைக்கிறது. ஆனால், நிச்சயமாக வாழ்க்கை மிகவும் நியாயமற்றது. உங்கள் நோக்கங்களுக்கும் நீங்கள் அடைவதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

நீங்கள் உங்கள் சகோதரரைப் பற்றி எழுதும் போது உங்கள் சகோதரரின் பொம்மைகளைப் பற்றிப் பேசுகிறீர்கள். மேலும், அத்தகைய பொருட்களின் மீதுள்ள ஈர்ப்பு அல்லது நம்பகத்தன்மை மற்றும் கதை அல்லது வாய்மொழிப் பதிவின் நம்பகத்தன்மை, உங்கள் உரையில் என்ன பங்கு வகிக்கின்றன? நீங்கள் சுட்டிக்காட்டும் பொருள்கள், புகைப்படங்கள் கதைக்கு நெருக்கமானதா?

நான் அதை 1989ஆம் ஆண்டு 'All Souls' படைப்பில் முதன்முதலில் செய்தேன். இது நகைச்சுவையானது. ஏனென்றால், நான் அதை மீண்டும் ஒரு பரந்த அளவில் Dark Back Of Timeஇல் செய்தபோது, அது செபால்ட் போலிருக்கிறது என்று சிலர் சொன்னார்கள். எனக்கு செபால்ட் மிகவும் பிடித்தவர். அவர் வாழ்வின் கடைசி இரண்டு ஆண்டுகளில்




நாங்கள் கடிதங்களைப் பரிமாறிக்கொண்டோம். நான் அவருடைய படைப்பை விரும்பினேன், வெளிப்படையாக அவர் என்னுடைய படைப்பை விரும்பினார். ஆனால், செபால்ட் செய்வதைப் போன்றது? நான் அதை 1989இலேயே செய்தேன் (ஆசிரியர் குறிப்பு: டபிள்யூ.ஜி. செபால்ட் (W.G. Sebald) முதல் புத்தகம், 'After Nature', ஜெர்மனியில் 1988இல் வெளியிடப்பட்டது; ஆனால், படங்கள் எதுவும் இல்லை) ஜான் காவ்ஸ்வொர்த்தின் இரண்டு புகைப்படங்கள் மட்டுமே இருந்தன.

அப்போது எனது பதிப்பாளரின் ஆச்சரியம் எனக்கு நினைவிருக்கிறது. 'இது புகைப் படங்கள் நாவலா?' 'ஆமாம், ஏன் அப்படி இருக்கக்கூடாது?' அப்போது இதையெல்லாம் செய்வது பீமிகவும் வினோதமான காரியம். இப்போது அது நிச்சயமாக விசித்திரமான விஷயம் இல்லை. முக்கிய காரணம் மிகவும் எளிது.

எர்வின் பனோஃப்ஸ்கி, பிற கலை வரலாற்றாசிரியர்கள் அல்லது கலைக் கோட்பாட்டாளர்களைப் பற்றிப் படிக்கும்போது நான் கண்டு பிடித்தேன், ஒரு படத்தைப் பார்ப்பது மற்றும் அதைப் பற்றி ஒரேநேரத்தில்படிப்பதுஎவ்வளவு மகிழ்ச்சியை அளிக்கிறது. எர்வின் பனோஃப்ஸ்கி அதை விவரிக்கும் போது, நீங்கள் சரிபார்த்துச் சொல்லலாம். ஆம், அவர் சொல்வது சரிதான்; என்னால் பார்க்க முடியும். நான் இதைப் பற்றி யோசித்திருக்க மாட்டேன்; ஆனால், இப்போது அவர் அதைக் குறிப்பிடுகிறார். நான் பார்க்கிறேன். ஒரு நாவலில் யாராவது ஒரு ஓவியம் அல்லது புகைப்படத்தைப் பற்றிப் பேசினால், அதை வாசகருக்குக் காண்பிப்பது நியாயமானது. மறைக்கப்பட்ட நோக்கம் விஷயங்களை மேம்படுத்துவதற்காக இல்லை. நான் ஒரு படத்தைப் பற்றிப் பேசுகிறேன், அந்தப் படத்தைக் காட்டுவோம், வாசகர்களை அதைப் பார்க்க அனுமதிப்போம்.

ஸ்பெயினின் உள்நாட்டுப் போரின்போது சிறுவயதில் 18, 17 வயதில் கதைசொல்லியின் மாமா கொல்லப்பட்டது பற்றி விவாதிக்கப்படும்போது, Your Face Tomorrowஇல் ஒருமுறை, ஒரு நெறிமுறைச் சிக்கல், எனக்கு அது ஒரு பெரிய பிரச்சனையாக இருந்தது. குடியரசுக் கட்சியின் சிறைச்சாலையில் அவர் இறந்த புகைப்படத்தைக் காட்டியதால்தான் அவரது சகோதரர் கொல்லப்பட்டதைப் பற்றி அவரது தாய் அறிந்ததாக விவரிப்பாளர் குறிப்பிடுகிறார்.

இந்தப் பகுதி என் அம்மாவின் உண்மையான கதையை அடிப்படையாகக் கொண்டது. அவளுடைய சகோதரர்களில் ஒருவர் கொல்லப்பட்டார். அவர் சிறையில் இருக்கும் புகைப்படம் அவளுக்கு மட்டுமே தெரியும். நாவலில் நான் இந்த புகைப்படத்தை விவரித்தேன். ஆனால், நான் அந்தப் புகைப்படத்தை இணைக்க வேண்டுமா என்று நினைத்தேன். நான் அதை புனைகதையாக உருவாக்கினேன். ஆனால், அந்தக் கதை புகைப்படத்தில் இருந்துதான் வருகிறது. பல ஆண்டுகளுக்கு முன்பு 17 அல்லது 18 வயதில் வாழ்ந்து இறந்த ஒருவரின் புகைப்படத்தை நான் காட்ட வேண்டும் என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால், அவர் இப்படித்தான் வாழ்ந்தார்; அவர் இப்படித்தான் கொல்லப்பட்டார். இறந்தவரின் முகத்தை மறைப்பது பழைய பாரம்பரியம். ஏன், இப்போது அது செய்யப்படவில்லை; எந்த சந்தர்ப்பங்களிலும் இல்லை?

ஒரு காரணம் என்னவென்றால், இறந்த முகத்தைப் பார்க்கும் ஒருவர் பெரும் அதிர்ச்சியைத் தவிர்ப்பது மட்டுமல்லாமல், இறந்தவர் தனது அம்சங்களையோ அல்லது வெளிப்பாட்டையோ காண்பிக்கவில்லை; அவர் தனது உருவத்தை படமெடுப்பதைக் கட்டுப்படுத்தவில்லை. நான் அந்தப் புகைப்படத்தைச் சேர்க்க வேண்டுமா என்று நினைத்தேன். ஒருபுறம், நான் வாசகருடன் நியாயமாக நடக்கவில்லை என்று நினைத்தேன். நான் புகைப் படத்தைப் பற்றிச் சொல்லும் படங்களைக்காண்பிப்பதேஎனது பழக்கமாகஇருக்கும்போதுஇந்தப் படத்தை வாசகரிடமிருந்தே பெறுகிறேன். வாசகருக்கு நியாயமாகவோ அல்லது முற்றிலும் நியாயமற்றதாகவோ இருக்கும் வகையில் இருந்தாலும் புகைப்படத்தின் வரைபடத்தை சேர்க்கலாம் என்று நினைத்தேன். ஆனால், இறுதியில் நான் என் கூட்டாளியான கார்மனுடன் பேசினேன். அவள்தான் நான் காண்பிக்கக் கூடாது என்று சொன்னாள். இறுதியில் யதார்த்தம் என்னைத் தணித்தது. ஒரு உண்மையான நபர், அவர் என் மாமா, நான் அவரை ஒருபோதும் சந்தித்ததில்லை. ஆனால், ஒரு கற்பனையில்கூட அவரை அப்படிக் காட்டக்கூடாது.

உங்கள் படைப்பு முழுவதும் நீங்கள் வன்முறையின் புகைப் படங்களைக் காண்பிப்பதற்கான நெறிமுறைகளை பற்றி

விவாதிக்கிறீர்கள். மேலும் வாய்மொழி அறிக்கையின் 'உண்மையற்ற தன்மை' அந்த விவாதத்தை எவ்வாறு தெரிவிக்கிறது என்பதையும் நன்கு அறிந்திருக்கிறீர்கள். ஒரு நிகழ்வு, மொழியின் எல்லைக்குள் இருந்தால், ஏதோ ஒன்று நடந்தது அல்லது நடக்கவில்லை என்று கருதஇயலும்.நீங்கள்படங்களைப் பயன்படுத்துவது ஒரு வகையான 'ஆதாரம்' காண்பிக்கும் முயற்சிதானா?

சில சந்தர்ப்பங்களில், ஆம் என்றுதான் சொல்வேன். உதாரணமாக, 'Dark Back Of Time' இது உண்மையில் நிகழ்ந்த விஷயம். இது நடந்தது என்பதைக் காட்ட சில துண்டுகள் மீண்டும் உருவாக்கப்பட்டுள்ளன. மிகவும் புதுமையான மனிதரான ஹக் ஓலாஃப் டி விட் (Hugh Olaf de Witt) துண்டு அல்லது முழு புகைப்படம் என்னிடம் உள்ளது. ஏனெனில், இது ஏதோ முற்றிலும் கண்டுபிடிக்கப்பட்டது போல் தெரிகிறது. அதே வழியில், 'All Souls'இல் ஜான் காவ்ஸ்வொர்த்தின் இரண்டு புகைப்படங்கள் இருந்த போதிலும்,பெரும்பாலான மக்கள் ஜான் காவ்ஸ்வொர்த் கண்டு பிடிக்கப்பட்டதாக நினைத்தனர். இது மிகவும் புதுமையானது. மக்கள் அவரைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று நினைத்தார்கள். நான் ஆக்ஸ்போர்டில் இருந்ததால் மீதமுள்ளவை சுயசரிதையாக இருக்க வேண்டும் என்றும் அவர்கள் நினைத்தார்கள். உண்மையில் நடந்தவை அனைத்தும் கற்பனையான நிகழ்வாக மாறுவது போல் தெரிகிறது. பதினைந்தாம் நூற்றாண்டு ஒருபுறம் இருக்கட்டும், பதினெட்டாம் நூற்றாண்டில் நடந்த ஒரு கொலையைப் பற்றி, நீங்கள் அதைக் கேட்கிறீர்கள்; எவ்வளவு பயங்கரமானது மற்றும் திகிலூட்டுவது. ஆனால், கற்பனையான ஒரு கதையை கேட்கும்போது நீங்கள் அதை அதிகமாகவோ அல்லது சற்று குறைவாகவோ கேட்பீர்கள். விஷயங்கள் அனைத்தும் உண்மை, உண்மை - ஒரு வகையில் புனைகதையாக மாறும். ஆனால், அதே நேரத்தில், அவை கற்பனைகளாக இருந்தாலும், குறைந்தபட்சம் அவை இன்னும் சொல்லப்படுகின்றன என்பதை நாம் அங்கீகரிக்க வேண்டும். இன்னொரு விஷயம் என்னவென்றால், அவை உண்மையில் நடக்கவில்லை என்பது போல அவை எதுவும் சொல்லப்படவில்லை.

ஒரு நாவலாசிரியர் அல்லது ஒரு வரலாற்று ஆசிரியரால் நினைவில் வைக்கப்பட்டுச் சொல்லப்பட்ட அல்லது மீண்டும் கண்டுபிடிக்கப்பட்ட கதைகள் கூட, அவை கற்பனைக் கதையாக நினைக்கத் தோன்றும் விதத்தில் அழிந்துவிட்டன. பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு கொலை, அது நிஜமாகவே நடந்தது என்று உங்களுக்குத் தெரிந்தாலும், இப்போது அதைக் கண்டு நீங்கள் அதிகம் உணர்ச்சியடைய மாட்டீர்கள். நீங்கள் ஒரு திரைப்படத்தைப் பார்த்தாலோ அல்லது ஒரு நாவலைப் படித்தாலோ நிச்சயமாக நீங்கள் உணர்ச்சி வசப்படுவீர்கள். ஏனெனில், குறிப்பாக திரைப்படங்களில் அவை நடப்பது போல் உணர வைக்கும் திறன் உள்ளது. அதுவே நாம் அவற்றை ரசிக்கும் காரணங்களில் ஒன்றாகும். ஆனால், இது ஒரு திரைப்படம் என்பதுஉங்களுக்குத்தெரியும்;இது ஒரு நாவல் என்பது உங்களுக்குத் தெரியும். உண்மையான விஷயங்களில் உள்ள பிரச்சினை என்ன வென்றால், நேரம் கடந்து விட்டால்,அதிகமாகவோ அல்லது குறைவாகவோ அதே உணர்வில் நீங்கள் அதனை நோக்கிச் செல்வதுதான். உதாரணமாக, உங்கள் தந்தைக்கு இது நடந்தால் கூட நீண்ட காலத்திற்கு விதி இதுதான்.

ஸ்பானிஷ் உள்நாட்டுப் போரின் வேடிக்கையான விஷயங்களில் இதுவும் ஒன்று. எழுபது ஆண்டுகளுக்கும் மேலாக அது நடந்து முடிந்தது. ஏன் இன்னும் மக்கள் உள்நாட்டுப் போரின் உண்மைகளைப் பார்க்க வில்லை? அது இப்போது நடக்கவில்லை. ஒருவேளை நம் சொந்த தந்தைகள் அதை அனுபவித்ததால் இருக்கலாம்; ஆனால், காலப்போக்கில் அதுவும் அப்படியே இருக்கும். நெப்போலியன் போரைப் பற்றி இப்போது சொன்னால், அது முழுக்கதையாக தெரிகிறது. எங்களிடம் பிரபலமான கோயா ஓவியங்கள் அனைத்தும் இருந்தாலும், அது ராபின் ஹூட் போல் தெரிகிறது. உள்நாட்டுப் போர் ஏன் நிஜம் என்று ஒலிக்கத் தொடங்கவில்லை. அது உள்நாட்டுப் போராக இருக்கலாம், வெளிநாட்டு எதிரிக்கு எதிராக அல்ல அல்லது இன்றும் நாம் அவதிப்படுவதால் இருக்கலாம். ஆனால், அதுவே இறுதியில் போராக நடக்கும். இது கற்பனையாக மாறும், கடவுளுக்கு, நான் நன்றி சொல்ல வேண்டும். புனைகதை வரலாற்றின் புகலிடம் என்று சில சமயங்களில் சொல்லியிருக்கிறேன். ஆம், எல்லோரிடமும் வரலாற்றுப் புத்தகங்கள் உள்ளன. ஆனால், வரலாறு சிலரால் மட்டுமே படிக்கப்படுகிறது, இலக்கியமும் கூட. பரந்த படிப்பாளர்கள் சிலரே.

உங்கள்படிப்புகளைவரலாற்று ஆவணங்களாகக்கருதுகிறீர்களா?

இல்லை, உண்மையில் இல்லை. இலக்கியத்தின் கால அளவை நீங்கள் கணக்கிட முடியாது. சந்ததி என்பது கடந்த காலத்தின் ஒரு சிந்தனை, அது முரண்பாடானதாக இருக்கும் என்றே நான் எப்போதும் கூறுவேன். இப்போதெல்லாம் மூன்று மாதங்கள் மட்டுமே நீடிக்கும் சந்ததியினரை நினைப்பது கேலிக்குரியதாக இருக்கும். Your Face Tomorrow வெளியான பிறகு ஒரு பத்திரிகையில் பத்தி எழுதினேன். முழுமையாக எழுதி



முடிக்க எனக்கு எட்டு / ஒன்பது ஆண்டுகள் எடுத்தது. அதன்பின் கடும் முயற்சிக்குப் பிறகு, அது இறுதியாக வெளியிடப்பட்டது. வெளியிடப்பட்ட சுமார் மூன்று மாதங்களுக்கு பிறகு, நான் ஒரு நல்ல நண்பரும் புத்தக விற்பனையாளருமான ஒருவரைப் பார்க்க 'Calle Major' சென்றேன். நாங்கள் சிறிது நேரம் பேசினோம். அவர் என் படைப்புகளில் என்ன விற்கிறார் என்று கேட்டேன். "உங்கள் நாவலின் மூன்றாவது தொகுதி நன்றாக விற்பனையானது. ஆனால், இப்போது அது வரலாற்றுக்கு முந்தையது" என்றார். "ஆமாம், ஒருவேளை நீங்கள் சொல்வது சரியாக இருக்கலாம்" என்று நான் சொன்னேன்.

இப்போதெல்லாம் எவையும் நிலைப்பதில்லை. அனைத்தும் மிக வேகமாக நுகரப்படுகின்றன. என் கதையில் தொடங்கி எனது பத்தியில் ஒரு பகுதியில் எழுதினேன், 'இன்றைக்கு உள்ள பிரச்சனைகளில் ஒன்று, நிகழ்காலம் எதுவோ அது ஏற்கனவே கடந்துவிட்டது' என்று சொன்னேன். தற்போது இருப்பதால், அது ஏற்கனவே பழையதாக உள்ளது. ஏனெனில், அது எதிர்பார்க்கப்படவே இல்லை. ஆனால், உள்ளது; ஆனால், இது ஏற்கனவே இருந்தது, பழையது. திரைப் படங்கள், நாவல்கள், இசை என எல்லாவற்றிலும் இது நிகழ்கிறது. அவை இன்னும் உருவாக்கப் படாத வரை மட்டுமே அப்படி ஒன்று இருப்பதாகத் தெரிகிறது.

போலன்ஸ்கியின் ஒரு புதிய படம் வந்திருக்கிறது. பெயரைச் சொல்லுங்கள், படம் உங்களுக்கு கண்ணுக்குத் தெரியவில்லை என்றாலும், அதை நினைக்கும் போது உற்சாகம் இருக்கிறது. ஆனால், அதைப் பார்க்கக்கூடிய தருணத்தில் நாங்கள் ஏற்கனவே அதைப் பார்த்தோம், இது கடந்த காலம், இது வரலாற்றுக்கு முந்தைய காலம், இது பழைய காலம்.

இப்போதெல்லாம் அது இன்னும் மோசமாக உள்ளது. உண்மையில், ஏதோ ஒன்று இன்னும் இருப்பதற்கான சூழ்நிலையே அதை மேலும் மேலும் பழையதாக ஆக்குகிறது. இது ஒரு வகையில் பயங்கர மானது. இப்படி இருக்கும்போது நம் சந்ததியினரைப் பற்றி நினைப்பது மிகவும் நகைப்புக்

குரியதாக இருக்கும். நான் மிகவும் அதிர்ஷ்டசாலி, ஏனென்றால், எனது நாவல்கள் பொதுவாக வழக்கத்தை விட நீண்ட காலம் நீடிக்கும்-இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ஸ்பெயினில் வெளிவந்த The Infatuations இன்னும் விற்பனை யாகிறது, இன்னும் உயிர்ப்புடன் இருக்கிறது. அதோடு இருபது ஆண்டுகளுக்கு முன்பு வெளியிடப் பட்ட A Heart So Wite, இன்னும் எப்படியோ உயிருடன் இருந்து வாழ்ந்து கொண்டிருக்கிறது. அது நன்றாகவே இருக்கிறது.

*நம் சந்ததியினரைப் பற்றிய சிந்தனை இப்போது வேறுபட்ட சகாப்தத்திற்குச் சொந்தமானது. விஷயங்கள், ஒரு வாழ்க்கை மற்றும் மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கை - எழுத்தாளர்கள் மற்றும் புத்தகங்கள் - இப்போதெல்லாம் மிகவும் அரிதானவை.*

*நிகழ்காலத்திற்கும் கடந்த காலத்திற்கும் இடையிலான உறவைப் பற்றிப் பேசும்போது, உங்கள் படைப்புகளில் மீண்டும் மீண்டும், மனிதர்கள் மீது நிகழ்த்தப்பட்ட அரச பயங்கர வாதம் மற்றும் கற்பனையாகப் புனையப்பட்ட வாழ்வின் மீதான திகில், இவை இரண்டும் சேர்ந்த ஒரு முழு வாழ்க்கையின் விவரிப்பு, சில குறிப்பிடத்தக்க இறுதிச் செயல்களால் மறைக்கப் படலாம் என்ற அச்சத்தை வெளிப்படுத்துகிறது. ஒரு விபரீதமான, விசித்திரமான மரணம் அல்லது சில இரகசியங் களின் வெளிப்பாடு. இந்தக் கருத்தில் கடந்த காலத்திற்கும் நிகழ்காலத்திற்கும் இடையே நிலவும் ஒரு பதற்றம். கடந்த காலத்தை ஒருவேளை தவறாகப் பிரதிநிதித்துவப் படுத்துவதற்கான நிகழ்காலத்தின் சக்தி பற்றிய எச்சரிக்கையும், தவறாகச் சித்தரிப்பதால் கடந்த காலத்தின் மீதுள்ள பாதிப்புக்கு ஒரு அனுதாபமும் கிடைக்கப் பெறுவதாக உள்ளது. உங்கள் நாவல்கள் நிகழ்காலத்தின் மேலாதிக்கத்தை எதிர்க்க முயல்வதாக உணர்கிறீர்களா?*

'ஆம்' என்றுதான் நான் ஒரு வகையில் நினைக்கிறேன். ஆனால், எனது சொந்தச் செயல்பாட்டில் நான் அந்த நோக்கில் செல்லப் போவதில்லை. எனக்கு விருப்பமானதை பற்றி எழுதுவேன். சந்ததியினர் அல்லது மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கை - எனக்காகக் கூடக் கவலைப்படுவதில்லை - நான் எழுதுவது நீடிக்க நான் என் நேரத்தை எடுத்துக்கொள்கிறேன்.

*நான் மெதுவாகவே எழுதப் போகிறேன். என்னிடம் கணினி இல்லை. எனவே, ஒவ்வொரு முறை திருத்தங்களைச் செய்யும்போதும் அந்தப் பக்கத்தை மீண்டும் தட்டச்சு செய்ய வேண்டும். நான் ஐந்து முறை தட்டச்சு செய்கிறேன். நீங்கள் உங்கள் நேரத்தை வீணடிக்கிறீர்கள் என்று மக்கள் என்னிடம் கூறுகிறார்கள். அந்த திருத்தங்களை செய்ய, கணினியாக இருந்தால் மீண்டும் தட்டச்சு செய்ய வேண்டியதில்லை.* நான் சொல்கிறேன், நான் அது பற்றிக் கவலைப்படவேயில்லை. நான் அதை மீண்டும் தட்டச்சு செய்யவே விரும்புகிறேன். அதை மீண்டும் படிக்கும் போது முதல்முறையிலிருந்து அது வித்தியாசமாக இருப்பது ஒரு காரணம். தட்டச்சு செய்யும் ஒவ்வொரு முறையும் நீங்கள் எழுதியதை நீங்கள் உங்களுக்குப் பழக்கப்படுத்திக் கொள்கிறீர்கள். அதை உங்களுடையதாக ஆக்குகிறீர்கள். முன் இருந்ததைவிட, இது புதிய முதல் வரைவு என்று பழகிக்கொள்ள வேண்டும். நான் அதை என்னுடையதாக பொறுப்பேற்கிறேன். அது ஏற்றுக் கொள்ளப்படுகிறதா என்று பார்ப்போம். நீங்கள் அதை மீண்டும் திருத்தினால் நல்லது.

*மாணவர்களோ சிறுவர் களோ அல்லது சிறுமிகளோ - கவிதைகளை நகலெடுக்கிறார்கள். அவர்கள் தங்கள் பாடப் புத்தகங்களில் கவிதையைப் படிக்க முடியும். ஆனால், பெரும்பாலும் அவர்கள் அதை ஒரு குறிப்பேட்டில் எழுத வேண்டும், அதைத் தங்கள் சொந்த படைப்பு போல. அதை அவர்கள் கையால் எழுதினால் அவர்களுக்கு சொந்தமாக்கிக் கொள்கிறார்கள். அதைச் செய்யும்போது சிறுவர்கள் மற்றும் சிறுமிகளின் மனதில் அது வெளிப்படுத்தப்படாத எண்ணம் என்று நான் நினைக்கிறேன்.*

நேரத்தைப் பெறுவதற்காக நான் எழுதவில்லை; அதை இழப்பதற்காகவும் உணர் வதற்காகவும் நேரம் என்னைக் கடந்து செல்வதை உணரவுமே எழுதுகிறேன். அதற்காகவே நான் என் நேரத்தை எடுத்துக் கொள்கிறேன். பொறுமையற்ற வாசகருக்கு, எனது நாவல்கள் சில சமயங்களில் மிகவும் உற்சாகமூட்டுவதாகவோ அல்லது எரிச்சலூட்டுவதாகவோ இருக்கும். Your Face Tomorrow இரண்டாவது தொகுதியில் உள்ளது:'வாருங்கள், இந்த மனிதன் தலை துண்டிக்கப்படுவாரா இல்லையா என்று சொல்லுங் கள்! இல்லை இல்லை, நான் சொல்லமாட்டேன். ஏனென்றால், அது உண்மையில் முக்கியமில்லை. ஒரு வாளைப் பற்றிப் பேசுவதே இப்போது என் எண்ணம். நாம் ஏன் வாள்களுக்கு இவ்வளவு பயப்படுகிறோம்? அதன் அர்த்தம் என்ன?' சில பக்கங்களுக்கு கதை சொல்பவரின் மனதில் இந்த நினைவுகள் இருக்கும். மேலும் அவர் வாழும் இந்த சூழ்நிலைக்கும். குளியலறையில் இருக்கும் போது டிஸ்கோவில் பத்து நிமிடங்களுக்கும், உள் நாட்டுப் போரைப் பற்றி அவரது தந்தை சொன்ன விஷயங்களுடன் தொடர்பை யோசிப்பேன். நான் என் நேரத்தை எடுத்துக்கொள்கிறேன், நான் கவலைப்படவில்லை. மக்கள் விரும்பி படித்தால் நல்லது. அவர்கள் செய்யவில்லை யென்றால், நான் என்ன செய்ய முடியும்?

*எந்த சமகால நாவ லாசிரியர்களை நீங்கள் படிக் கிறீர்கள்?*

இப்போது நிறைய படிப்ப



தில்லை. பல ஆண்டுகளாக எனது சொந்த மொழியில் மட்டுமல்ல, பிற மொழிகளிலும் அன்று வரைக்குமான ஆக்கங்களைத் தெரிந்துகொள்ளும் நிலையில் இருக்க முயன்றேன். நேர மின்மையால்தான் Your Face Tomorrow எழுதுவதையே நிறுத்திவிட்டேன். ஏறக்குறைய பத்து வருடங்களுக்குப் பிறகு, அதுவரைக்கும் படிக்காம லிருந்ததை எட்டிப் பிடிக்க முயலுவது முடியாத காரியம் என்பதை உணர்ந்தேன். மறுபுறம், புதுப்பித்த நிலையில் இருக்க முயல்வதிலேயே நான் நிறைய நேரத்தை இழந்துவிட்டேன் என்பதை உணர்ந்தேன். ஏனென்றால், சில நேரங்களில் நீங்கள் நல்ல புதிய விஷயங்களைக் காண்பீர்கள். ஆனால், அது மட்டும்தானா? மேலும், நீங்கள் வயதாகிவிட்டீர்கள், நீங்கள் படிக்காத பல கிளாசிக்குகள் இருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்கள்; சிலவற்றை நீங்கள் மீண்டும் படிக்க விரும்புகிறீர்கள். எனவே, இப்போதெல்லாம் நான் ஆலிஸ் மன்றோ போன்ற சிலரைத் தவிரப் பல சமகால எழுத்தாளர்களைப் படிப்பதில்லை. உதாரணமாக, அவர் சிறந்தவர் என்று நான் நினைக்கிறேன். நான் கோட்ஸியின் புதிய விஷயங்களைப் படித்தேன். செபால்ட் உயிருடன் இருந்த போதும் எழுதும்போதும் நான் படித்தேன். ஜான் பான்வில்லே, இயன் மெக்வான்; ஆனால், பல இல்லை. மறுபுறம், நீங்கள் எவ்வளவு அதிகமாக எழுதுகிறீர்களோ, அவ்வளவு குறைவாகப் படிக்கிறீர்கள் என்பதையும் உணர்ந்தேன். நீங்கள் வயதாகும்போது புதிய விஷயங்களையும் குறைவாகப் படிப்பீர்கள். என்னைப் பற்றி எனக்கு தெரியாவிட்டால், நான் என் படைப்புகளை படிக்க மாட்டேன்.

ஜேவியர் மரியாஸ் எழுதிய *1500* பக்கங்கள் கொண்ட ஒரு நாவலை யாராவது என்னிடம் எடுத்து வந்து, ஸ்பானிஷ் பையன், சமகாலத்தவர் படிக்க வேண்டும் என்று சொன்னால, நான் படிக்காத டிக்கன்ஸ் நாவல் ஒன்றைக் கொடு என்பேன். பின்னர் நான் அதைப் படிப்பேன். ஆனால், ஒரு ஸ்பானிஷ் எழுத்தாளரின் இந்த சமகால நாவலைப் படிக்க மாட்டேன். நிச்சயமாக நானே அவற்றை எழுதியிருந்தாலும் அவற்றைப் படிக்க உதவ முடியாது. நானே படிப்பேன் என்று நினைக்கவில்லை. அந்த மிக நீண்ட புத்தகத்தை நான் மூன்று தொகுதிகளாக வெளியிட்டதற்கு ஒரு காரணம், மிக நீண்ட புத்தகங்களை நான் வெறுக்கிறேன். ஒரு தொகுதியை வாங்கும் வாய்ப்பை வாசகர்களுக்கு வழங்க வேண்டும் என்று நான் நினைத்தேன், அவர்கள் தொடர விரும்பவில்லை என்றால், அவர்கள் முழுவதையும் வாங்கியிருக்க மாட்டார்கள்.

என்னளவில் நான் மிக நீண்ட புத்தகங்களை நம்பவில்லை. ஒவ்வொரு முறையும் ஒரு புது நாவல் எழுதுவது போல எனக்கு இருந்ததால் நான் அப்படித்தான் செய்தேன். இது நிச்சயமாக அதே

நாவல்தான். ஆனால், எனக்கு, உளவியல் ரீதியாகவும் வாழ்க்கை வரலாற்றைச் சொன்னதிலும் இது மூன்று நாவல்கள் போன்றது.

உங்கள் கதைசொல்லிகள் பெரும்பாலும் பெயர்கள் மற்றும் உறவுப்பெயர்களின் அடையாளத்துடன் தொடர்புடையவர்கள். அந்தப் பெயர்கள், அவர்கள் அடையாளம், அவர்கள் மீது பிரயோகிக்கப்படும் விளைவைக் முன்னரே கொண்டிருக்கக்கூடும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா அல்லது அவை நெகிழ்வானதா?

உண்மையில் இல்லை. என் நாவல்களில் வரும் பெயர்கள் பொதுவானது; இன்னும் சொல்லப் போனால் இயல்பானது. உண்மை என்னவெனில், பெயர்களை பயன்படுத்துவது பற்றி சில தயக்கம் உள்ளது. The Infatuations நாவலில் முதல் வாக்கியத்தில் ஒரு பெயரின் மீது ஒரு குழப்பமே உள்ளது, Deverne அல்லது Devergnes. நாவலைத் தொடங்குவதற்கு சில நேரங்களில் நாம் பலவற்றைப் பயன்படுத்துகிறோம். பெயர்கள் துல்லியமாக மிகவும் மாறக் கூடியவை. மக்கள் அவற்றை மாற்றுகிறார்கள், மக்கள் வேறு வேறு பெயர்களைப் பயன் படுத்துகிறார்கள். எழுத்தாளர்கள் பெயர்கள், எழுத்திற்காக வைத்துக்கொள்ளும் பெயர்கள், புனைபெயர்கள் மற்றும் எதுவாக இருந்தாலும் அதைச் செய்திருக்கிறார்கள். மார்க் ட்வைன், லூயிஸ் கரோல் விதிவிலக்காக இருக்கலாம். பெயர்கள் மிகவும் மாறக் கூடிய விஷயம் என்று நான் நினைக்கிறேன். இது ஒரு வகையில் அடையாளத்திலிருந்து எப்படியாவதுதப்பிக்கஉதவுகிறது. வேறு எதையும் மாற்றுவதைவிட பெயரை மாற்றுவது மிகவும் எளிதானது, குறிப்பாக உங்கள் முகத்தைவிட.

அது படைப்பு முடிவதற்கு ஒரு நல்ல இடமாக இருக்கும்.

செய்ய நேரம் எடுக்கும்.




உங்களுக்கு இன்னும் ஐந்து நிமிடங்கள் தேவைப்பட்டால், அதற்குச் செல்லுங்கள்; நீங்கள் ஏதாவது தயார் செய்திருந்தால் கேளுங்கள். இப்போதெல்லாம் எழுதுவதில் ஒரு விசித்திரமான விஷயம் என்னவென்றால், நாம் முன்பு பேசியவற்றைப் போல, விஷயங்களின் கால அளவு இல்லாதது. சில நேரங்களில் - நாம் ஏன் இதைச் செய்கிறோம், எழுதவா? இது ஒரு விசித்திரமான விஷயம். ஏனென்றால், கணினியில் எழுதுபவர்கள்கூட, மெதுவாகத்தான் பக்கங்களை நிரப்ப முடியும் என்று நினைக்கிறேன். நீங்கள் எதையும் சரியாகச் செய்யாவிட்டாலும், குப்பைகளை எழுதினாலும், அது நேரம் எடுக்கும். தட்டச்சு நினைவிருக்கிறது. நான் மொழி பெயர்த்த போது நான் ஒரு புதிய இறுதிப் பதிப்பை உருவாக்க வேண்டியிருந்தது. நடைமுறையில் இறுதி விஷயம் நகலைத் தட்டச்சு செய்வதுதான். ஒரு நாளைக்குப் பத்து பக்கங்களே என்னால் தட்டச்சு செய்ய முடிந்தது என்று நினைக்கிறேன். பக்கங்கள் மூலம் படைப்பு பெற நேரம் எடுக்கும். இது ஒரு கைவினைஞரின் வேலையைப் போன்றது.

இரண்டு அல்லது மூன்று வருட பணிக்குப் பிறகு, ஒரு புத்தகத்தை வெளியிடும் போது, பத்திரிகையாளர்களிடம் இருந்து எழுத்தாளர்களுக்கு ஒரு பொதுவான கேள்வி உள்ளது: 'அடுத்தாக என்ன எழுதத் திட்டமிடுகிறீர்கள்?' இது போன்று கால்பந்து வீரர்களுக்கும் நடக்கும். அவர்கள் சாம்பியன்ஸ் லீக்கை வென்றுள்ளனர் என்று பத்திரிகையாளர்கள் கூறுகிறார்கள். 'சரி, அடுத்து என்ன?' 'சரி, நான் சாம்பியன்ஸ் லீக்கை வென்றேன், என்னை விட்டுவிடுங்கள்.'

நான் என்ன நினைக்கிறேன் என்றால் இது கொடூரமானது. இது மனிதாபிமானமற்றது. உங்களுக்கும் என்னைப் போன்ற அதே உணர்வு இருக்கிறது. மூன்று வருடங்கள் உழைத்த ஒரு புத்தகத்தை நான் முடித்துவிட்டேன். அடுத்து என்ன என்பது பற்றி என்னிடம் கேட்காதீர்கள். அடுத்தது இருக்க வேண்டுமா என்றுகூட நான் யோசிக்கவில்லை. சில நேரங்களில் நீங்கள் ஆச்சரியப் படுகிறீர்கள், நான் ஏன் இதைத் தொடர வேண்டும்? நீங்கள் ஏன் தொடங்குகிறீர்கள் என்பது போல் கேள்வி இது இல்லை. மேலும் படிக்க தொடங்குகிறேன். ஆனால், நான் ஏன் இப்போது அதைச் செய்கிறேன்? நான் ஏன் என் எழுத்தைத் தொடர வேண்டும்? அதற்குப் பதில் சொல்வது கடினம். ●

**ஜெகநாத் நடராஜன்**
<jaganathanvr4@gmail.com>

#  அம்ருதா பதிப்பகம் வெளியீடுகள்

முத்துக்கள் பத்து வரிசை நூல்கள்
சிறந்த எழுத்தாளர்களின் தேர்ந்தெடுத்த 10 சிறுகதைகள்

**பி. எஸ். ராமையா**
பக். 80, விலை ரூ. 50

**புதுமைப்பித்தன்**
பக். 48, விலை ரூ. 30

**ந. பிச்சமூர்த்தி**
பக். 80, விலை ரூ. 50

**எம். வி. வெங்கட்ராம்**
பக். 64, விலை ரூ. 50

**லா. ச. ரா**
பக். 80, விலை ரூ. 50

**கல்கி**
பக். 96, விலை ரூ. 60

**தி. ஜ. ர**
பக். 80, விலை ரூ. 50

**தி. ஜானகிராமன்**
பக். 96, விலை ரூ. 60

**ஜெயகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**கு. அழகிரிசாமி**
பக். 96, விலை ரூ. 60

**அசோகமித்திரன்**
பக். 64, விலை ரூ. 40

**சா. கந்தசாமி**
பக். 112, விலை ரூ. 70

**ஆ. மாதவன்**
பக். 80, விலை ரூ. 50

**ஆதவன்**
பக். 96, விலை ரூ. 60

**பிரமிள்**
பக். 96, விலை ரூ. 60

**வண்ணநிலவன்**
பக். 64, விலை ரூ. 40

**வண்ணதாசன்**
பக். 64, விலை ரூ. 40

**நாஞ்சில்நாடன்**
பக். 80, விலை ரூ. 50

**ராஜம் கிருஷ்ணன்**
பக். 112, விலை ரூ. 70

**விட்டல்ராவ்**
பக். 64, விலை ரூ. 40

**பா. செயப்பிரகாசம்**
பக். 160, விலை ரூ. 100

**நீல. பத்மநாபன்**
பக். 80, விலை ரூ. 50

**தமிழ்ச் செல்வன்**
பக். 64, விலை ரூ. 40

**கந்தர்வன்**
பக். 80, விலை ரூ. 50

**கோணங்கி**
பக். 64, விலை ரூ. 40

**சூர்யகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**ஜெயந்தன்**
பக். 160, விலை ரூ. 100

**மொழிபெயர்ப்பு நாவல்கள்**

**மிருகங்களின் பண்ணை**
ஜார்ஜ் ஆர்வெல்
பக். 120, விலை ரூ. 75

**பாரதிபுரம்**
யு.ஆர். அனந்தமூர்த்தி
தமிழில்: தி.சு. சதாசிவம்
பக். 240, விலை ரூ. 150

**பிறவாத குழந்தைக்கு ஒரு கடிதம்**
ஓரியானா ஃபேலஸி
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**பெண்ணே கேள்**
கிருஷ்ணா ஸோப்தி
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 112, விலை ரூ. 70

**சிதைந்தகூடு**
தாகூர்
பக். 80, விலை ரூ. 50

**நெருப்பு நிலா**
வாசி ரெட்டி சீதா தேவி
பக். 160, விலை ரூ. 100

**ஒரு லாரி டிரைவரின் கதை**
சிங்கிஸ் ஐத்மாத்தவ்
தமிழில்: தா. பாண்டியன்
பக். 128, விலை ரூ. 80

**மாயாபுராணம்**
பி. சுரேந்திரன்
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**மொழிபெயர்ப்பு சிறுகதைகள்**

**சல்வடார் டாலி**
உலகச் சிறுகதைகள்
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 192, விலை ரூ. 120

**குதிரில் உறங்கும் இருள்**
பாப்லோ நெருடா
பக். 112, விலை ரூ. 70

**ஒரு வார்த்தையின் பொருள்**
ப்ரஃபுல்லா ராய்
வங்காளத்தில் இருந்து: புவனா நடராஜன்
பக். 224, விலை ரூ. 140

**அண்மைக்கால வங்காளச் சிறுகதைகள்**
தமிழில்: சு. கிருஷ்ணமூர்த்தி
பக். 240, விலை ரூ. 150

**அன்புள்ள பிலாத்துவுக்கு**
பால் சக்கரியா. தமிழில்: திலகவதி
பக். 96, விலை ரூ. 60

**யௌவனத்தின் கடல்**
நவீன மலையாள சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: குளச்சல் மு. யூசுப்
பக். 288, விலை ரூ. 180

**உள்ளுக்குள் ஓடும் ஆறு**
வடகிழக்கு இந்திய சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: வெ. இன்சுவை
பக். 144, விலை ரூ. 90

**மண்வாசல்**
பிரேம்சந்த்
தமிழில்: ரமேஷ்குமார்
பக். 96, விலை ரூ. 60

## சிறுகதைகள்

**சித்திரக்கூடம்**
லஷ்மி மணிவண்ணன்
பக். 128, விலை ரூ. 80

**அன்னை தந்த ஒளி**
பெ. தூரன்
பக். 80, விலை ரூ. 50

**அறிஞர் அண்ணா சிறுகதைகள்**
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 160, விலை ரூ. 100

**அவள் அதுவானாள்**
பா. விசாலம்
பக். 80, விலை ரூ. 50

**வான்கோவின் காது**
கீதாஞ்சலி
பக். 112, விலை ரூ. 70

**பழைய காலண்டரில் இருதினங்கள்**
பாலு சத்யா
பக். 128, விலை ரூ. 80

**மீண்டெழுதல்**
இல. வின்செண்ட்
பக். 128, விலை ரூ. 80

**வண்ணத்துப் பூச்சிகளும் பெண்களும்**
சூர்யகுமாரன்
பக். 120, விலை ரூ. 75

## நாவல்

**சுகுண சுந்தரி சரித்திரம்**
வேதநாயகம் பிள்ளை
பக். 112, விலை ரூ. 70

**முள்ளும் மலரும்**
உமா சந்திரன்
பக். 288, விலை ரூ. 180

**டணாயக்கன் கோட்டை**
இ. பாலகிருஷ்ணநாயுடு
பக். 480, விலை ரூ. 300

**அசன்பே சரித்திரம்**
எம்.சி. சித்திலெவ்வை
பக். 128, விலை ரூ. 80

**ஓடும் நதி**
சுப்ரபாரதிமணியன்
பக். 240, விலை ரூ. 150

**சாகசப் பறவைகள்**
எஸ்ஸாரெஸ்
பக். 180, விலை ரூ. 90

## கட்டுரைகள்

**இந்தியா - மர்மமும் சவாலும்**
இ.எம். பாஸ்டர்
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 192, விலை ரூ. 120

**உலகை மாற்றிய புத்தகங்கள்**
ராபர்ட் டவுன்ஸ்
பக். 240, விலை ரூ. 150

**ஜெயகாந்தன் சிந்தனைகள்**
தேர்வும் தொகுப்பு: திலகவதி
பக். 112, விலை ரூ. 70

**தமிழகக் கோட்டைகள்**
விட்டல்ராவ்
பக். 240, விலை ரூ. 150

**என் பார்வையில் படைப்பிலக்கியம்**
முருகேச பாண்டியன்
பக். 240, விலை ரூ. 150

**என்றென்றும் வாழும் படைப்புகளும் படைப்பாளர்களும்**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

**மூச்சுத் திணறுது பூமி**
மருத்துவர் வி. ஜீவானந்தம்
பக். 120, விலை ரூ. 75

**பெண்ணொன்று கண்டேன்**
பாமரன்
பக். 112, விலை ரூ. 70

**ஆரிய உதடுகள் உன்னது**
பாமரன்
பக். 64, விலை ரூ. 40

**சொல்லப்படாத உலகம்**
யமுனா ராஜேந்திரன்
பக். 96, விலை ரூ. 60

**பாலமாகி நிற்கும் பணி**
யமுனா ராஜேந்திரன்
பக். 160, விலை ரூ. 100

**ஈழத்து அரசியல் நாவல்**
யமுனா ராஜேந்திரன்
பக். 112, விலை ரூ. 70

**திரைப்படங்களான இலக்கியங்களும் நாடகங்களும்**
அறந்தை மணியன்
பக். 128, விலை ரூ. 80

**திரைவெளி**
சுப்ரபாரதிமணியன்
பக். 128, விலை ரூ. 80

**அசோகமித்திரன் 77**
சுப்ரபாரதிமணியன்
பக். 144, விலை ரூ. 90

**நெஞ்சு பொறுக்குதில்லையே**
சாவித்திரி கண்ணன்
பக். 192, விலை ரூ. 120

**கிட்டத்தட்ட கடவுள்**
சி. சரவணகார்த்தியேன்
பக். 154, விலை ரூ. 135

**பாம்பின் கால்த்தடம்**
பிரபு திலக்
பக். 200, விலை ரூ. 125

**பறை**
மருத்துவர் எம். வளர்மதி
பக். 144, விலை ரூ. 90

**தமிழ்ச் சூழலில் அறிவியல் புதினங்கள்**
நெல்லை சு. முத்து
பக். 192, விலை ரூ. 120

**மிக அருகில் மிருகம்**
மருத்துவர் ஆர். கோவிந்தராஜ்
பக். 128, விலை ரூ. 80

## கவிதை

**விக்ரமாதித்யன் கவிதைகள்**
தேர்வும் தொகுப்பும்: வித்யாஷங்கர்
பக். 560, விலை ரூ. 350

**சொட்டுச் சொட்டாய் விழுகின்றன செவ்வரளிப் பூக்கள்**
என்.டி. ராஜ்குமார்
பக். 80, விலை ரூ. 50

**காதலியர் மேன்மை**
தபசி
பக். 160, விலை ரூ. 100

## திரைக்கதை

**இம்சை அரசன் 23ஆம் புலிகேசி**
சிம்பு தேவன்
பக். 160, விலை ரூ. 100

**ஆட்டோகிராப்**
சேரன்
பக். 208, விலை ரூ. 130

## நாடகம்

**முன்மேடை**
அ. ராமசாமி
பக். 144, விலை ரூ. 90

**கள்ளத் தோணி**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

## வாழ்க்கை வரலாறு

**பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு**
ஏ.எல். நடராஜன்
பக். 240, விலை ரூ. 150

## சுய முன்னேற்றம்

**வாழ்க்கை வாழ்வதற்கே**
மருத்துவர் திருநாவுக்கரசு
பக். 160, விலை: ரூ. 210

**மனம்**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 112, விலை ரூ. 70

**போதை?**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 160, விலை ரூ. 100

**வெற்றிப்பாதை**
சுரேஷ்குமார்
பக். 128, விலை ரூ. 80

## திலகவதி நூல்கள்

**கல்மரம்**
சாகித்திய அகாதமி விருது பெற்ற நாவல்
பக். 96, விலை ரூ. 60

**உனக்காகவா நான்**
நாவல்
பக். 80, விலை ரூ. 50

**நேசத்துணை**
நாவல்
பக். 128, விலை ரூ. 80

**சொப்பன பூமியில்**
நாவல்
பக். 104, விலை ரூ. 65

**தமிழ்க் கொடியின் காதல்**
நாவல்
பக். 144, விலை ரூ. 90

**மூங்கில் திரை**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**மரப்பாலம்**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

## முத்துக்கள் பத்து

சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தீப்பறவையின் கூடு**
சிறுகதைகள்
பக். 186, விலை ரூ. 120

**சக்கர வியூகம்**
சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தொப்புள் கொடி**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**உங்களுக்காக உலக சினிமா**
கட்டுரைகள்
பக். 360, விலை ரூ. 225

**காலந்தோறும் அறம்**
கட்டுரைகள்
பக். 96, விலை ரூ. 60

**நபி (ஸல்) நமக்குச் சொன்னவை**
கட்டுரைகள்
பக். 120, விலை ரூ. 75

**சேகுவேரா**
வாழ்க்கை வரலாறு
பக். 80, விலை ரூ. 50

**முடிவெடு**
சுய முன்னேற்ற நூல்
பக். 144, விலை ரூ. 90

**இப்படித்தான் வென்றார்கள்**
கேள்வி-பதில்கள்
பக். 208 , விலை ரூ. 130

**காலத்தின் கண்ணாடி**
தொகுப்பு நூல்
பக். 1200, விலை ரூ. 750

**கோடை உமிழும் குரல்**
தொகுப்பு நூல்
பக். 400, விலை ரூ. 250

---

நூல்களை பெற +91 94440 70000 என்ற எண்ணுக்கு அழைக்கவும். அல்லது குறுஞ்செய்தி / வாட்ஸ் அப் செய்தி அனுப்பினால் நாங்கள் தொடர்புகொள்கிறோம். info.amrudha@gmail.com மின்னஞ்சல் முகவரி மூலமாகவும் தொடர்புகொள்ளலாம்.

அம்ருதா சந்தாதாரர்கள் நூல்களை 60% விலை குறைப்பில் பெற்றுக்கொள்ளலாம்.

நூல்களை சென்னை அம்ருதா அலுவலகத்திலும் புத்தகக் காட்சிகளில் அம்ருதா ஸ்டால்களிலும் நேரிலும் பெற்றுக்கொள்ளலாம்.

---

**அம்ருதா, 1 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு, மூன்றாவது பிரதான சாலை, சிஐடி நகர் கிழக்கு, நந்தனம், சென்னை - 600035**

சிறுகதை

# வெற்றுடல் குளம்

அமுதா ஆர்த்தி



ஓவியம்:
இளையராஜா

கானல் நீராய் ஓடிய தார்ச்சாலையில், நிழலைத் தேடிய அவளின் பாதம், குதிரையின் நடையைப் போலவே. தூரத்திலிருந்து அவளாக இருக்குமோவென பின் தொடர்ந்தேன். அவளது குதிகால்களில் வெடிப்பு. நடையின் இடையிடையே குதிகால் வெடிப்பில் சிக்கும் சேலையின் விளிம்பைத் தூக்கிக் கொண்டாள். பாதங்களிலிருந்து கொலுசின் ஓசையை மட்டும் கழற்றி எறிய முடியவில்லை. கூப்பிட நினைத்தபோது சாலையை கடந்தாள். பெயர் ஞாபகத்திற்கு வரும் முன்பே, அவள் கொலுசு, வருடங்கள் பலகழிந்தும் கண்முன்னே நடந்து திரிகின்றது.

பள்ளி கூடத்தில் முன்வரிசையில் அமர்ந்திருப்பாள். சுமாராக படிக்கவும் செய்வாள். எடுத்துக்காட்டாகச் சொல்வார்கள் ஆசிரியர்கள், இவளைப் போன்று பள்ளிக் கூடத்திற்கு சுத்தமாக வரவேண்டுமென்று.

எனக்குக் கடைசி பெஞ்சில் இருப்பது பிடிக்கும். ஆசிரியர்களின் கேள்விகளுக்குத் தப்பித்துக் கொள்ளலாம். என் அருகிலிருக்கும் கோமதி சரியாக வாய்பேச முடியாதவள். வயதைத் தாண்டிய வளர்ச்சியோடு வெளுத்த தேகமும் வளமான உடல் பொலிவும் என இளமையின் வசீகரம் மெல்ல எட்டிப்பார்க்கும் பருவம். அவளோடு பழகுவதாலோ என்னவோ அதிகம் பேசாமல் செய்கைகளே எனக்கும் பாஷையாகியது. கண்களை அகலவிரித்து உதட்டைச் சுழித்து, 'பெருசா இவதான் கொலுசு போட்டுருக்காளாம் பாரு' என்பாள். அவள் கொலுசின் இடைவெளிகளில்லா முத்துக்கள் பெரும் ஓசையோடு காலின் அசைவிற்கு ஆடும். என் கவனமெல்லாம் அவள் கொலுசின் சத்தத்தோடு.

அவள் கொலுசுக்குக் கால் முளைத்து என் கால்களில் தானாக வந்து மாட்டிக்கொண்ட கனவில், கால்களை வேகமாக ஆட்டும்போது கால்கள் விர்...விர்ரென்று பிடித்து இழுப்பதுபோன்ற உணர்வு. பாட்டி சொல்லுவாள், 'அது ஒண்ணுமில்ல மக்கா... பெருச்சல் பத்தியிருக்கும்'.

அறுவடை காலங்களில், பள்ளிக்கூடம் செல்லும் வழியெங்கும் சூடடித்த வைக்கோல்களை ஆங்காங்கே வெயிலில் காயப் போடுவார்கள். ஆட்கள் போகிறதுக்கு சிறிது இடைவெளிவிட்டு வழிநெடுக



வைக்கோல்களைத் தூவி அவ்வப்போதுகிளறிக்கொடுத்துப் பக்குவப்படுத்துவார்கள். வைக் கோலை மிதிப்பவர்களை மிரட்டுவதற்கென பெரிய குச்சி வைத்து ஆட்கள் காவலிருப்பார் கள். ஆளில்லாத நேரம் பார்த்து வைக்கோலில் நடக்கும்போது கொலுசு போட்டு நடப்பதாக நினைப்பு. வைக்கோல்கள் மிதிப்படும் சத்தம் எனக்குக் கொலுசின் ஓசை போன்றே கேட்கும். காய வைத்த வைக்கோல்கள் முடிவுறும் நேரம், திரும்பி பார்த்து, நின்றுபோன என் கொலுசின் சத்தத்தைக் காலில் போட்டுக்கொள்ள நினைக்கும்போது, குச்சியை வைத்து மிரட்டுவார்கள். சரி, சாயங்காலம் வீடு திரும்பும் போது பார்த்துக்கலாம் என காலை சொறிஞ்சிக்கிட்டே பள்ளிக்கூடத்தை வந்தடைவேன்.

மாலையில் வைக்கோல்கள் நிறைந்திருந்த சாலை செறிச் சோடிக் கிடக்கும். தெருக்களில் சேவல், பெட்டைக் கோழிகள், புறாக்களென, உதிர்ந்து கிடக்கும் என் கால் கொலுசின் முத்துக்களை கொத்தி விழுங்கிக் கொண்டிருக்கும். கூட்டிய வைக்கோல்களை ஓரிடத்தில் சேர்த்து,இருபதடி உயரம்வைக்கப்

போராகி வளர்ந்திருக்கும். வைக்கோல்களின் வாசனை யோடு சிறிதான மழைத்தூறல் வாசனையும் கருமேகம் சூழ்ந்த வானும் சேர்ந்து புதுப்பொலிவை உண்டு பண்ணும். இப்போதும் அந்தவாசனை அந்நினைவுகளைச் சுமந்து வரும்.

கொலுசு போடும் ஆசையைப் பாட்டியிடம் சொல்லும்போது, "கொலுசு பேய்க்கு ரொம்ப பிடிக்கும்... அதபோய் யாரு போடுவா... சும்மா கெட..." அவள் இயலாமையின் வார்த்தைகள் அதிகாரத்தோடேயிருக்கும்.

பயமாயிருந்தாலும் கொலு சொலியின் ஓசை என்னோடு வளர்ந்து கொண்டேயிருந்தது. பாட்டி சொல்லித்தரும் புராணக்கதைகளில் வரும் கதா பாத்திரங்கள் போல் எனக்கும் அதிசயப் பிறவி இருக்காதா... சலங்கையோடு பிறந்ததாக சொல்லிக்கொள்ள.

கொலுசின் முத்துக்கள் விழாதாவென்று நானும் கோமதியும் பின்னாலே செல்வதைக் கண்டு அவள் அலட்டிக் கொள்வாள். கொலுசின் ஓசையை எனதாக்கிக் கொள்ளப் பலவித யோசனை. இடைவேளை நேரங்களில் அவக் கூடவே நடப்பது. பாட்டியால் வாங்கித்தரமுடியாத,பிடித்தமான அந்த ஓசையை நான்தான் தேட வேண்டும்.எங்கேபோய்தேடுவது. ஞாபகத்திற்கு சப்பாத்துக்குளம் வந்தது. சிறுவர்கள் குளத்தில் மூழ்கி மண்ணெடுக்கும்போது நாணயங்கள் கிடைக்கும். மத்தியான நேரம் யாரும் வரமாட்டார்கள். அந்நேரம் குளிக்கச் செல்வேன்.

சலனமில்லாத குளத்து நீரைக் காற்றுகுட்டிக்குட்டி அலைகளாய் கரை சேர்க்கும். முதல் அலைகள் கரையை வந்தடையும் முன்னே கரைந்து போய்விடும். ஒதுங்கி நிற்கும் வாத்துக் கூட்டம் பக், பக்கென கனத்த சத்தத்தை எழுப்பி குளத்தின் அமைதியைக் குலைத்துக்கொண்டிருக்கும்; எனக்குள்ளான அமைதியையும் கூட. துப்பிவிழும் எச்சிலைக் கொத்தித் தின்னக் கூட்டமாய் கும்மாளமிடும் கைலி மீன்கள். அல்லி, தாமரை, நீர்ப் பாசிகளையும் பார்த்திராத வெற்றுடல் குளம்.

மன்றங்கள் சார்பில் நீச்சல் போட்டிகள் வைப்பது சப்பாத்துக் குளத்தில். ஒரு கரையில் சாடி எந்த பக்கம் வேண்டுமானாலும் நீச்சலடிக்கலாம். இரண்டொரு முறை சாடி, நீச்சலடித்து, மூழ்கி மூச்சை சரிசெய்து. நீரின் அடியில் மூழ்கியிருப்பேன். அப்போது காலில் சோப்பு வழுக்குகிறதா, இல்ல பாம்பு வழுக்குகிறதாவன சந்தேகம். நீருக்கு அடியில் கன்னிப் பெண்கள் கொலுசுகளை அணிந்து அங்குமிங்கும் நடப்பது போன்ற சல்... சல்ஞ் ஓசை. அது இயற்கையின் வசீகர விளையாட்டு. காது பல கண்களுக்குச் சமமானது. மூழ்கியிருக்கும் வேளை நீர் சொல்லிக்கொடுத்தது.

மூழ்கி மண்ணெடுக்கும் வேளை ஒற்றைக் கால் கொலுசு கிடைத்தது. இதில் ஒரேயொரு முத்துமட்டும் இருந்தது. அமைதியாக இருந்த ஒற்றை முத்து எனக்கு எரிச்சலூட்டியது. மற்றொரு காலின் கொலுசும் கிடைத்துவிடும் என்ற முயற்சியில் பலமாதங்கள் குளத்தில் மூழ்கியும் கிடைக்கவில்லை.

சத்தமில்லா ஒற்றை கொலுசை என்ன செய்வது. பாட்டியிடம் கொடுத்தேன். அவளோ அதைப் பத்திரமாக வாங்கி, 'திருப்பியும் ஒண்ணு கிடைக்கட்டும்' என்று சொல்லி தட்டானிடம் விலைக்கு கொடுத்துவிட்டாள். கொலுசொலி வேர் பிடித்து உறுதியான மரமாகிக் கொண்டிருந்தது எனக்குள்.

பக்கத்து ஊரில் கொடை விழா. சிறு அருவியாய் குதித்துப் பரந்து ஓடிக் கொண்டிருந்த ஆற்றையொட்டிய கோவில். பெரியப் பாறைகளைத் தகர்த்தெறிந்தபள்ளம்ஓடையாகக் கோவிலின் அருகே. அகாலமான பயத்தை உண்டுபண்ணும். வெள்ளி,செவ்வாய்க்கிழமைகளில் உச்ச நேரத்தில் யாரும் அந்தப் பக்கம் போகமாட்டார்கள்.

கொடைவிழா போல் கணி யாட்டம் விசேஷம். அரவாணிகள் காலில் சலங்கை கட்டி சுற்றிச் சுற்றி ஆடிவரும் ஆட்டத்தை வேடிக்கை பார்ப்பேன். மாடனின் கதை சொல்லும் பாடலைவிடவும் கணியாட்டத்தில் சலங்கை சொல்லும் கதை, எனக்கான ஓசையில்லை என்றாலும், கால் கொலுசின் மெல்லிய சத்தத்தின் மென்மை இதிலில்லை.

கொடைவிழா முடிந்து வெளியில் போடப்படும் பூமாலைகளிலுள்ள வாடாமல்லி, செவ்வந்தி விதைகள் ஈரமண்ணில் முளை வந்து செடிகளாவி ஆற்றோரங்களெங்கும் பூத்துக் குலுங்கும். ஆற்றில் குளிக்கப் போகும்போது கணியாட்டம் நடந்த மணலில் கால்களை வைத்து துழாவியபடியே செல்வேன். அதில் சலங்கையின் ஒரு முத்து கிடைத்தது. சலங்கையின் ஒற்றை முத்து பெருத்த சத்தத்தைப் போட்டபோது கணியானின் ஆட்டம் கண்முன்னே வந்து போனது.

ஆட்டுக்குட்டி, நாய்க் குட்டிக்குக் கட்டிவிட்டால் குதிக்கும்போது அழகான சத்தம் வரும். கோமதியிடம் காட்டினேன்; முத்து எப்படிக் கிடைத்தது என்றாள். மீசையை முறுக்கி, நாக்கை வெளியே தள்ளி, கண்ணை மொறைத்தவுடன், அவளோ பயத்தில் நடுங்கி, 'முதல்ல நீ அத எடுத்த இடத்தில போட்டிரு... நீ போடல்லன்னா... கனவுல வந்து தொந்தரவு பண்ணி கேக்கும்' என்றாள்.

பாட்டியிடம் சொன்னேன். 'அது பொல்லாத எடமாச்சே... என்ன செய்ய நீ கால்லகிலுக்கிட்டு நடக்கியதுக்கு... அண்ணணாடு பாடு கழியதுக்கே ஒனக்க சித்தி காரணம். அவ சாப்பாட்டுக்கும் ஒனக்க படிப்புக்கும் தருவா...

இதெல்லாமா அவகிட்ட கேக்க... அவா தாறதே அவ வீட்டுக்காரனுக்குத் தெரியாது. அவன எப்படித்தான் சம்மாளிக்கியாளோ... சித்தப்பங்காரன் அவள கேள்வி கேக்கியதுல கெட்டிக்காரன்... நீ எடுத்தத கொண்டு போய் தூர நின்னாவது போட்டுக்கிட்டு வந்துரு...'

பாட்டி சொன்னதுபோல போட்டுவிட்டு திரும்பிப் பார்க்காமல் ஓடி வந்துவிட்டேன். இரண்டு நாள் கழித்து வந்த காய்ச்சலுக்கு அந்த முத்தை எடுத்துக்கொண்டு வந்ததுதான் காரணம் என்று சொல்லிப் பல முறை மன்னிப்பு கேட்டாள் பாட்டி. அந்த நேரம் சித்திப் பார்க்க வந்தாள். காய்ச்சலுக்கான காரணம் சொன்னாள் பாட்டி.

'சரி...அவள கூட அனுப்புமா... ரெண்டு நாள்ல சீட்டு ஒண்ணு முடியுது. அத வாங்கி அவளுக்கு கொலுசு வாங்கி கொடுக்கிறேன்...' சித்தியிடம் எப்படி சொல்லன்னு தெரியாமல், அவளின் மடி மீது உட்கார்ந்து கட்டிப்பிடித்து தலையைத் தோள்மீது சாய்த்துக்கொண்டேன். என் அணைப்பில் அவள் தாய்மையின் அன்பைக் காட்டினாள்.

சித்தியின் வீட்டுக்கு போகிறதுக்கு ஒரு மைல் தூரம் போக வேண்டும். நடந்து குறுக்கு வழியாக அடிக்கடி நான் போய் வருவதுண்டு. நேரம் கருக்கலாயிட்டதுனால் சித்தி என்னை ரோட்டு வழியாக கூட்டிச் சென்றாள். நெடுந்தூரம் பயணித்த பறவையின் இளைப்பாறுதல். மெல்லக் கொலுசின் பளபளப்பாகக் கால்கள் மாறிக்கொண்டன. ரோட்டின் ஓரமாகச் சித்தியின் கைகளைப் பிடித்து நடக்கும்போது, என்னைப் போலவே கைகளைப் பிடித்து நடப்பவர்களும், எதுவோ ஒன்றை பிடித்திருக்கும் கைகளில் தேடுவதாக.

எனக்கு முன்னே கொலுசு அணிந்த பாதங்கள் நடனமாடியபடி செல்கின்றன.



ரோட் டோர ஒன்றிரண்டு கொலுசு கடைகளை ஆவலோடு பார்ப்பதைக் கவனித்த சித்தி, 'இங்கெல்லாம் எடுக்க வேண்டாம்; நமக்கு டவுண்ல போய் பெரிய கடைப் பார்த்து வாங்கலாம்' என்றாள். டவுணுக்கு புறப்படத் தயாரானது மனசு. ரோட்டோர தெருவிளக்கில் மோதும் வண்டுகள் போடும் சத்தம்கூட கொலுசின் சிறு அசைவை காட்டுகின்றன. என் பாதங்களுக்கு வழி சொல்லியது கொலுசொலி.

கொலுசு வாங்கும் விஷயத்தை சித்தப்பாவிடம் சொல்லக்கூடாது என்று சொன்னாள், சித்தி. சித்தப்பா எப்போது வேண்டுமானாலும் திட்டலாம் என்கிற முகபாவனையோடு சுற்றி வருவார். பாட்டியிடம் இருக்கும் சந்தோஷம் அங்குக் கிடைக்கவில்லை. நாங்கள் கொலுசு வாங்கக் கிளம்பிக் கொண்டிருந்தோம். சித்தப்பாவுக்கு தெரியாமல் சீட்டுக்காரரை பார்த்து வாங்கிக் கொள்ளலாம் என்று சொன்னாள் சித்தி.

டீ கடையில் சித்தப்பாவை பார்த்த சீட்டுக்காரர் நேற்றோடு சீட்டு முடிந்த விஷயத்தைச் சொன்னார். டீ கடையிலிருந்து வந்தவர் சித்தியிடம் சொன்னார்: 'நல்ல இடம் ஒண்ணு பாத்து வச்சிருக்கேன் பாத்துக்க... பத்து பதினைஞ்சி தென்னை மரம் நிக்குது. நாம அதுக்கு அட்வான்ஸ் குடுத்திடலாம். இன்னும் நாலு நாள்ல அந்த ரெண்டு சீட்டும் முடிஞ்சிரும். எல்லாத்தையும் சேத்து எடத்த வாங்கிடலாம்.'

சித்தியின் முகத்தில் எந்த அசைவுமில்லை. சித்தியின் கைகளைப் பிடித்து, 'வா போகலாம்' என்றேன். மறைவிடம் நோக்கிக் கூட்டிச் சென்று, 'ஒன்ன இண்ணைக்கி வீட்டுல கொண்டு விடுகிறேன்' என்றாள்.

முகத்தில் எங்கேனும் இப்போதுவாங்கித்தரும்எண்ணம் இருக்கிறதாவென என்னை அறியாமலேயே அழுதபடியே சித்தியை நோக்கினேன். பலமுறை கேட்டால்எங்கசித்தப்பாதெரிந்து திட்டிவிடுவாரோ. 'ஒத்தைக்கே ஆத்தங்கரை வழியாகபோகிறேன்' என்றேன். 'இல்ல...கொஞ்சம் பொறு. அம்மாகிட்ட வந்து நானே வெவரம்சொல்லியேன்' என்றாள். சித்தி என்னோட வருவதை நான் விரும்பவில்லை.

எனது ஓசை ஆழமான கிணற்றுக்குள் மூழ்கிக் கொண்டேயிருந்தது. கை கால்கள் வியர்த்துச் சிறு நடுக்கத்துடன் இருக்க ஏமாற்றத்தின் உருவம் அழகாகச் சிரித்துக்கொண்டது. கொலுசின் முத்துக்கள் இரண்டாகப் பிளந்து மண்ணில் விழ வழிப்போக்கனின் கால்களில் மதிப்பிட்டு புதையுண்டது. நிறங்களற்ற எண்ணங்கள் ஒரே இடத்தில் வெகு நேரம் தேங்கிப்போனது. கண் பார்க்கும் திசையெங்கும் எனைச் சுற்றிய சுவர்கள் நகர முடியாத நெருக்கம். என் பாதை எங்கே? என் கால்கள், எதற்காக வந்தோம் என்பதையே மறந்து ஆற்றங்கரையோரமாக நடக்கத் துவங்கின. ●

**அமுதா ஆர்த்தி**

amuthaarthi7870@gmail.com

# பக்குவம்



இந்திரா பார்த்தசாரதி

வழக்கமாகக் காலையில் சீக்கிரம் எழுந்துவிடும் அவன் அன்று எழுந்திருக்கவில்லை. மணி ஏழாகிவிட்டது. வாசலில் ஏதோ சப்தம் கேட்பது போலிருந்தது. அவன் மனைவி கலவரத்துடன் அவனிடம் வந்தாள்.

"என்ன சத்தம் வாசல்லே?" என்றான் அவன், அவளிடம்.

"வாசல்லே வந்து பாருங்க, எனக்குப் பயமா இருக்கு?"

அவன் செருப்பைப் போட்டுக்கொண்டு வாசலுக்கு வந்தான். முப்பது, நாற்பது பேரிருக்கும். கையில் கொடி பிடித்துக்கொண்டு நின்றார்கள். குங்குமப் பொட்டு அணிந்த ஒரு நடுவயதுக்காரர் அவனிடம் வந்தார்.

"நீங்கதானே பரந்தாமன், இந்தக் கதையை எழுதியவர்?" தம் கையிலிருந்த பத்திரிகையைப் பிரித்துக் காட்டினார்.

"ஆமாம்."

"இந்தக் கதையை எதிர்த்துத்தான் இந்தக் கூட்டம். இந்தக் கதையை எழுதினதுக்கு ஒண்ணு நீங்க மன்னிப்பு கேக்கணும், இல்லாட்டி, ஜெயிலுக்குப் போகணும்."

அவன் திடுக்கிட்டான். பத்து ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய கதை அது. ஒரு நாட்டு நாய், கடற்கரையில், காரில் உட்கார்ந்திருந்த ஒரு அல்சேஷியன் நாயைப் பார்த்துக் காதல் கொள்கிறது. தன் காதலை உரக்கக் குரைத்து வெளிபடுத்துகிறது. அல்சேஷியன் அந்த நாயை ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை.

"இது நான் பத்து வருஷங்களுக்கு முன்னாலே எழுதிய கதை. ஜஸ்ட் எ ஃபாண்டஸி. அர்த்தம் எதுவுமில்லே. உங்களுக்கு என்ன ஆட்சேபனை? எனக்குப் புரியலே" என்றான் அவன்.

"அல்சேஷியன் வெளிநாட்டு நாய், கிறிஸ்டியன். நாட்டு நாய் நம்மூரைச் சேர்ந்தது, ஹிந்து; பைரவர். அது இன்னொரு மதத்து நாயைக் காதலிக்கின்றதுங்கிற மாதிரி எழுதினா, நம்ம சநாதன தர்மத்தையே அவமதிக்கிற மாதிரி இருக்குல்லே."

"ஜெர்மன் லூதெரியன் சர்ச்" என்றான் அவன்.

"என்ன சொல்றீங்க?"

"கிறிஸ்துவ நாய்னு சொன்னா போதுமா? உட்பிரிவையும் சேர்த்துச் சொல்ல வேண்டாமா? நம்ம நாட்டு நாய் ஹிந்து மதம் சரி, என்ன ஜாதின்னு சொல்லி யிருக்கணும்னு நினைக்கிறீங்களா?" என்றான் அவன் புன்னகையுடன்.

"விளையாடறீங்களா?"

"விளையாடலே, உண்மையாகத்தான் கேக்கறேன், இலக்கியத்தை இலக்கியமா பாக்காமே, அதிலே அரசியலைக் கொண்டு வர்ரீங்களே, நல்லவா இருக்கு?"

அதற்குள் நாலைந்து பேர் கூட்டத்திலிருந்து அவனை நோக்கி வந்தனர்.

"சரி, நான் கேக்கறேன், சொல்லு, நீ எளுதறது இலக்கியமா?" என்றான் ஒருவன் கோபத்துடன்.

"அப்படிக் கேளுங்க, கரெக்ட். அது சரியான விமர்சனம். எதுக்காக அரசியலைக் கொண்டு வரீங்க? அது தப்பு" என்றான் அவன்.

"அவனோட என்னய்யா அநாவசிய பேச்சு? இனிமே இந்த மாதிரி கதை எளுத மாட்டேன்னு எளுதித் தரச் சொல்லு. செய்தது தப்புன்னும் நூத்தெட்டு தடவை எளுதித் தரணும்" என்றான் இன்னொருவன்.

அவன் மனைவி அப்பொழுது அங்கு வந்தாள்.

"அவரை கதையை வேற மாதிரி மாத்தி எழுதித் தரச் சொல்லுங்க" என்றாள் அவள்.

"என்ன சொல்றீங்க?"

"அல்சேஷியன் நாய் நம்ம நாட்டு நாய் பேரிலே காதல் கொள்ற மாதிரி, அது நமக்குப் பெருமைதானே?"

"அதெப்படிப் பெருமை? அது கிறிஸ்துவ நாய், நம்ம நாட்டு நாய் ஹிந்து. கல்யாணம் கட்டிக்க நம்ம நாய் மதம் மாறணுமா?"

"வேண்டாம். அல்சேஷியன் நாய் ஹிந்துவா மாறிடற மாதிரி எழுதுவாரு. மூணாவது தெரு வெங்கடேச அய்யங்கார் வீட்டு நாய், அதுவும் வெளிநாட்டு நாய்தான், 'ராமா, ராமா'ன்னு சொல்லறதுன்னு, மூணாம் வருஷத்து முன்னாலே அவங்க வீட்டிலே ஒரே கூட்டம். மந்திரிக கூட வந்து பாத்தாங்க. அந்த மாதிரி அல்சேஷியன், ஹிந்துவா மாறினா, 'ஓம், ஓம்'ன்னு கூட சொல்லலாம்; அது நமக்குப் பெருமைதானே!" என்றாள் அவள்.

சிறிது நேரம் மௌனம்.

நடுவயதுக்காரர் சொன்னார்: "அம்மா சொல்லறதுதான் எனக்குச் சரியா படுது. கதையை மாத்தி எழுதுய்யா, எழுத்தாளரே! கதையை முடிக்கறப்போ, அல்சேஷியன் 'ஓம்'னு சொல்ற மாதிரி எழுதுங்க. அம்மாவுக்கு இருக்கற அறிவு உங்களுக்கு இல்லியே!"

அவன் மனைவியின் புன்னகையினின்றும் அவனால் எதையும் ஊகிக்க முடியவில்லை.

காதில் ஒலித்தது. ஓங்கார நாதமா, நாயின் குரைப்பா என்று அவனுக்குப் புரியவில்லை. அவனுக்குப் பக்குவம் போதாது. ●

இந்திரா பார்த்தசாரதி

parthasarathyindira@gmail.com

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116. Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

